THE OOLIAN

REG. NO. M. 1509.

# ஊழியன்

மலர் 16

இதழ் 10

(தேசிய சித்திர வாரப் பத்திரிகை.)

விலை அணா 2

மலாய் காசு 15

4—9—36







'பறக்கும் குதிரை'. சிட்னியில் ஒருவர் தம் குதிரையில் குதிக்கும் ஆச்சரியம்.

Roja Muthiah Research Library
3rd Cross Road, C P T Campus
Taramani, Chennai 600 113,

This page is in colour

Best copy available

## இந்த தாயின் முகமலர்ச்சி !



அவள் சந்தோஷத்திற்கு காரணம், செல்வச் செருக்கல்ல, கணவனின் சொல்லொணு அன்பமில்லை. பின் என்ன ?

மண வாழ்க்கையின் லக்ஷியத்தை அவள் விரும்பினுள்— குழந்தை. அதுவே அவளை இன்புறச்செய்யும். கர்ப்பாசய வியாதியினுல் அவள் எதிர்பார்த்த சுகம் ஏற்படவில்லை.

ஆனுல்;

இப்பொழுது அவள் வாழ்க்கையில் ஒரு மாறுதல். லோத்ரா அவள் எதிர்பார்த்த குழந்தையை அளித்திருக்கிறது.

வாழ்க்கையின் இன்பத்தை அடைந்தவள் இவளே!

**லோத்ரா** எல்லாவிடங்களிலும் கிடைக்கும்.

## 1935-ஆு டிசம்பர் மாதத்திய மதிப்பின் முடிவுகள்.

**ஐந்து வருஷத்திலுள்ள உபரித் தொகை 26,24,202.**

தற்போதுள்ள பிரிமிய விகிதங்களின் பேரில் கொடுக்கப்பட்ட போனஸ்

பூரா ஆயுள் பாலிஸிகளுக்கு:

ரூ. 1000-க்கு வருஷம் 1-க்கு ரூ. 18—0—0

எண்டெளமெண்ட் அஷ்யூரன்ஸ்களுக்கு :

ரூ. 1000-க்கு வருஷம் 1-க்கு ரூ. 16—0—0

**நாஷனல் இன்ஷூரன்ஸ் கம்பெனி, லிமிடெட்.**

தலைமை ஆபீஸ் :

7, கவுன்ஸில் ஹவுஸ் வீதி, :: :: கல்கத்தா.



# ஊழியன்

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

மலர் கக. சென்னை, தாதுவஸு ஆவணிமீ 20உ வெள்ளி (4-9-1936) இதழ் ௯


*இந்தியத்தாய் முடிசூடி எழிற்சிங்கா*
*தனமேறி ஈடிலாது*
*சொந்தவை சேபுரியத் துயர்போக்கி*
*யாவருமே சுகவாழ் வெய்த*
*இந்தநிலம் வந்தவருள் இலைபிறப்பில்*
*இழிவுயர்வென் இயற்கை ஓங்க*
*நந்தலிலா ஊழியமே நான்கொண்டேன்*
*நல்லனவெந் நாளும் வாழ்க !*

## உடும்புப் பிடி

ஒன்றை விடாப் பிடியாகப் பிடித்துக் கொள்வதற்கு உடும்புப் பிடி என்று பெயர். உடும்பு என்ற பிராணி பிடித்தவற்றை விடாதாம். அதுபோன்ற மனிதர் உலகில் பலர் உளர். இந்த உடும்புப் பிடி மனிதர் நேரிய வழி பிடிப்பாராஞல் அது நல்லதாக இருக்கலாம். உடும்புப் பிடி பல சமயங்களிலும் பலரிடையிலும் தீய வழி பற்றியே நிகழக் காண்கின்றோம்.

திருச்சினுப்பள்ளி நகர சபைத் தலைவர் தேர்தல் சம்பவம் தமிழ் நாட்டையும் தாண்டி இந்தியப் பிரசித்தி பெற்றுவிட்டதல்லவா? இப்போது சில நாட்களாக எங்கு பார்த்தாலும் இதுதானே பேச்சு. காங்கிரஸ்க் கமிட்டிகள் கூட்டங் கூடுவதும் டாக்டர் ராஜனைப் பலமாகக் கண்டிப்பதும் ராஜகோபாலாச்சாரியார் அவர்களைத் தயவாகக் கெஞ்சுவதும் பெரிய அமர்க்களந்தான். மகாநாடு கூட்டும் வேலைக்கு அடுத்தபடியாக இப்போது தமிழ்நாட்டில் இடம் பெற்றிருப்பது திருச்சினுப் பள்ளி வேலைதான்.

தமிழ்நாடு காங்கிரஸ்க் காரியக் கமிட்டியார் தங்கள் கட்டளையை மீறி நடந்த திருச்சினுப்பள்ளி முனிசிபல் காங்கிரஸ் அங்கத்தவர் தங்கள் பதவிகளை விட்டு விலகிவிட வேண்டும் எனத் தாக்கீது பிறப்பித்தனர். காரியக் கமிட்டியார் தங்கள் செய்கை நியாயமானதென நீண்டதோர் அறிக்கையும் வெளியிட்டிருக்கின்றனர். அவர்கள் கூற்றில் சில, பல எதிர்க்கட்சியாரால் மறுக்கவும் படுகின்றன. தமிழ்நாடு காங்கிரஸ்க் காரியக் கமிட்டியின் அறிக்கை கூறுவது உண்மையா, மற்றையோர் கூற்றுச் சரியா என்பதை நாம் அறியோம். நடுநிலை வாய்ந்தோரால் பட்சபாதமின்றி விசாரிக்கப்பட்டு முடிவு கூறப்பட்டாலன்றி உண்மை உணருமாறில்லை.

இவ் ஆண்டில் அமைந்த தமிழ் நாடு காங்கிரஸ்க் காரியக் கமிட்டி, மக்கள் நன்மதிப்புக்குப் பாத்திரமானதல்ல என்பது பல உண்மைக் காங்கிரஸ்க்காரர் கருத்து என்பதை நாம் விளக்கத் தேவையில்லை. சென்ற ஆண்டில் அதன் தலைவராக இருந்த ஸ்ரீமான் சத்தியமூர்த்தி ஐயர் அவர்கள் செய்த காரியங்களையும் காரைக்குடி மகாநாடு சம்பந்தமாக அவர் செய்த அட்டூழியங்களையும் அறிந்தும் பல உண்மையாளர் எதிர்ப்புக்கிடையே அவர் மீண்டும் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பெற்ருர். அன்பர் மூர்த்தியார் தலைமை தமிழ்நாட்டுக் காங்கிரசுக்கு ஒரு பெருங் குறையென்பது தமிழ் நாட்டுக் காங்கிரஸ்க்காரர் பலர் கருத்து. அவர் தலைவரான பிறகு அந்தக் காரியக் கமிட்டியில் கலந்துகொள்ள விரும்பாது பல அன்பர் விலகிக் கொண்டதும் காரியக் கமிட்டி அமைந்த முறையும் காரைக்குடி மகாநாட்டுக்குப் போந்திருந்த பலரும் அறிந்ததே. என்றாலும் இப்போதைய காரியக் கமிட்டி சட்டப்படி அமைந்தது என்பதை மறுக்க முடியாது. விதிப்படி அக்கமிட்டிக்குக் கீழ்ப் படிந்து நடக்கவேண்டியவர்கள்

தவறு செய்வது ஒழுங்கு மீறிய செயலாகும்.

திருச்சி நகர சபையில் காங்கிரஸ் சார்பாக அங்கம் பெற்றோருள் ஒரு கூட்டத்தார் தலைவர் தேர்தலில் தமிழ்நாடு காங்கிரஸ்க் காரியக் கமிட்டியார் கருத்துக்கு மாருக நடந்து விட்டனர். அவர்கள் செய்தது தவறு என்றும் எனவே காங்கிரஸ்ப் பெயரால் பெற்றுக்கொண்ட இடங்களை விட்டு இறங்கிவிட வேண்டும் எனவும் அக்காரியக் கமிட்டி தீர்மானித்தது. காரியக் கமிட்டியின் தீர்ப்புச் சரியா தவறா என்பது வேறு விஷயம். காங்கிரசின் பேரால் அங்கம் பெற்றவர் காரியக் கமிட்டியின் முடிவுக்குக் கட்டுப்பட்டுத் தங்கள் பதவிகளை உடனே விட்டுவிடுதலே ஒழுங்கு. டாக்டர் ராஜனைத் தவிர வேறு யாரும் இதுவரை முனிசிபல் பதவியை விட்டதாகத் தெரியவில்லை. அதில் பலர் உடும்புப் பிடியில் கைதேர்ந்தவர்களாகவே காணப்படுகிருர்.

டாக்டர் ராஜன் அவர்கள் தலைவர் தேர்தலில் ஒழுங்கு மீறிய செயலுக்கு முக்கிய காரணராக இருந்த பழியை ஏற்ருர். எனினும் உடனே தம் பதவிகளை இராஜீநாமாச் செய்து பதவியாசை தமக்கில்லையென்ற உண்மையைக் காட்டிவிட்டார். அவரின் இச்செயல் பாராட்டத் தக்கது. ஆனல் அவரால் தலைவராக்கப்பட்ட ஸ்ரீமான் பொன்னையா பிள்ளை யென்பார் செய்கை வெறுக்கத்தக்கது. தலைவர் பதவியையும் அங்கத்தவர் பதவியையும் அவர் பல்லைக் கடித்துக் கொண்டு விடாப் பிடியாகப் பிடித்துத் தொங்குகிருர். அவர் தாம் தமது பதவிகளை விடப் போவதில்லை யென்று வீரமுழக்கம் செய்வது வெட்கப்படத் தக்கது என்பதை அவர் உணரவேயில்லை. காங்கிரஸ்ப் பெயரால் பெற்ற ஸ்தானத்தைக் காங்கிரஸ் விரும்பும்போது விட்டுவிடுதலே நேர்மை. அவராகட்டும், பிறராகட்டும் இராஜீநாமாக் கொடு என்றவுடன் கொடுத்துவிட்டு விரும்பினல் தனிமுறையில் மறு தேர்தலுக்கு நிற்றலே நியாயம். காங்கிரசின் பெயரால் பிறஸ்தானங்களைப் பெற்றுக் கொண்டு காங்கிரஸ் மெம்பர் ஸ்தானத்தினின்றும் விலகிக் கொண்டால் மட்டும் போதுமானது என்று நினைப்பது கோழைத்தனம்.

இதற்கு ஸ்ரீமான் பொன்னையா பிள்ளையையோ அவர் போன்ற பிறரையோ குறை கூறுவதில் பயனில்லை. ஸ்தல ஸ்தாபனங்கட்குக் காங்கிரஸ்ப் பெயரால் ஆட்களை நிறுத்துகின்ற தன்மையைத்தான் சொல்லுதல் வேண்டும். திருச்சியில் மட்டுமல்ல; எங்குமே காங்கிரஸ்ப் பெயரால் நிறுத்தப்படும் ஆட்களின் நிலைமையை அநேக இடங்களில் கண்டுதான் வருகிருேம். காங்கிரசுக்கும் தங்களுக்கும் ஸ்நானப் பிராப்திகூட இல்லாதவரெல்லாம் பதிவி யாசையால் காங்கிரஸ் பெயரைச் சொல்லிக் கொண்டு எளிதில் இடம்பெற்று விடுகிருர். காங்கிரஸ் ஆணைக்குக் கட்டுப்பட வேண்டும் என்ற மனப்பான்மை அவருக்கு எங்கிருந்து வரும்? ஸ்தானத்தை மட்டும் உடும்புப் பிடியாகப் பிடித்துக்கொள்ள அவர் தயங்கப் போவதில்லை. பதவி யென்றவுடன் வாயைப் பிளக்கும் எதையும் பொருட்படுத்தாத உடும்புப் பிடி மனிதர்களால் காங்கிரசின் பெருமை குறைந்து கொண்டு தான் வரும். இன்றையத் தமிழ்நாட்டுக் காங்கிரஸ் நிர்வாகிகள் நிலை உடும்புப் பிடி மனிதர்களைப் பெருக்குவதாகவே இருப்பது கண்டு வருந்தாதிருக்க முடியவில்லை. ஸ்ரீமான் சத்தியமூர்த்தியவர்களாவது உடும்புப் பிடியாகத் தலைவர் பதவியைப் பிடித்துத் தொங்காமல் விலகினுரானல் அது பிறர்க்கு வழி காட்டுவதாகும்.

# இடி முழக்கம்

## புதுக் கட்சிகள்

எலக்ஷன் நெருங்க நெருங்க புதுக் கட்சிகள் சில தோன்றி தேசாபிமானம் காண்பிக்கின்றன. இவற்றின் நோக்கம் 'பதவி முற்றுகை' யென்பது அனைவருக்கும் தெரியும். இவ்வாறு அவைகள் பதவிக்காக ஆசைப்படுவதை கண்டு சிரிப்பதை விட, தேசமக்கள் எப்படி யிருக்கின்ருர்களென அக்கட்சிகள் நினைக்கின்றன வென்பதையே நினைத்துச் சிரிக்கவேண்டும். பண்டித ஜவஹர் லக்னேவில் ஒரு எலக்ஷன் கூட்டத்தில் பேசியபோது அடியில் வருமாறு குறிப்பிட்டார்:—

தேசிய விவசாயிகள் கட்சி என்று ஒன்று தோன்றியுளது. சர்க்கார் மந்திரிகளும், ஐக்கிய மாகாணத்திலுள்ள பெரிய தாலுகாதார்களும் சேர்ந்து அதை துவக்கியுள்ளர், ஜனங்களிடம் வந்து வோட் கேட்க இவர்களுக்கு வெட்கமாக இல்லையா? இதுவரை இவர்கள் சாதித்ததென்ன? காங்கிரஸ் கிளர்ச்சியை அடக்க சர்க்காருக்கு உதவி தந்ததைத் தவிர வேறென்ன செய்தார்கள் இந்தப் பேர்வழிகள்? இந்த நபர்களுக்கு ஒரு ஓட் போனல் கூட அது ஜனங்களுக்கு வெட்கக் கேடாகும்!

பண்டிதரின் மேற்படி வார்த்தைகளை தவிர தென்னட்டு மக்கட்கு புதுக் கட்சிகளிடம் நடந்துகொள்ள வேண்டும் முறைபற்றி அதிகமாக எதுவும் சொல்ல வேண்டுவதில்லை.

## ஸ்தல ஸ்தாபனங்களில் சர்க்கார் ஆதிக்கம்

லையால்பூர் முனிசிபாலிடியில் வீர் நேருவுக்கு ஓர் உபசாரப்பத்திரம் படித்துக் கொடுத்துவிட்டதாகிய செய்தி என்ன பாடுபடுகின்றதென்பது நேயர்கட்கு ஞாபகமிருக்கலாம். பண்டித ஜவஹர் சமீபத்தில் லையால்பூரில் சுற்றுப் பிரயாணம் செய்தபோது அவருக்கு ஒரு உபசாரப் பத்திரத்தை படித்துக் கொடுப்பதென்று முனிசிபாலிடி தீர்மானித்தது. டிபுடி கமிஷனர் அத்தீர்மானத்தை ரத்துசெய்து விட்டார். அவரது உத்தரவை ஆலோசிப்பதற்காக



(மே 30-ந் தேதி) முனிசிபல் சபை மீண்டும் கூடியது. அக்கூட்டம் ஒத்திவைக்கப்பட்டதென்றும், திரு. சாந்த சிங்கு எம். எல். ஏயும் வேறு சிலரும் சட்டரீதியல்லாத ஒரு கூட்டத்தை நடாத்தி உத்தரவை மீறி நேருவுக்கு பத்திரத்தை வாசித்துக் கொடுத்துவிட்டார்களென்றும் கமிஷனரால் புகார் சொல்லப்பட்டது. இதனை யொட்டி திரு. சாந்த சிங்கையும் வேறு ஐவரையும் ஏன் முனிசிபாலிடியிலிருந்து நீக்கிவிடலாகாதென்று காரணம் கூறுமாறு சர்க்கார் நோட்டீஸ் சாதா செய்திருக்கின்றனர். பொதுஜனங்கட்கு உதவி செய்வதற்காக சர்க்காரிடம் பதவியைக் காதலிக்கும் 'தியாகிகள்' மேற்படி சம்பவத்தைச் சற்று மனதில் வைத்துக்கொள்ள வேண்டும்.

## நாஜியர் அட்டூழியம்

ஸ்பெயின் மக்கள் ஒருவரை யொருவர் வெட்டி அழிவைத் தேடிக்கொள்ளுதற்கு காரண பூதராயிருப்பவர் வெளி நாட்டிலுள்ள பாஸிஸ்டுகள் என்பது வெட்ட வெளிச்சமாகி விட்டது. பாஸிஸ்டுகள் தோன்றிய பிறகு சமாதான நாடுகள் பலப்பல ரணகளமாய் மாறி வருகின்றன. 'ந்யூஸ் ரிவ்யூ' பத்திரிகை எவ்வாறு ஸ்பெயின் கலகத்திற்கு மொராக்கோ சோல்ஜர்கள் காரணமாயிருந்தார்களென்பதை விளக்கும்போது ஜெர்மன் நாஜியர்களே கலகத்தைத் தோற்றுவித்தார்களென வெளிப்படையாக விளக்குகின்றது. இக் கூற்றை மெய்ப்பிக்க, ஜெர்மன் கப்பல்கள் ஸ்பெயின் கரையோரங்களில் செய்துவரும் அட்டூழியங்களும், அடையாளம் தெரிவிக்காமல் விமானங்கள் பறந்து சென்று செய்துவரும் குழப்பங்களும் போதிய சான்றுகளாகும். ஆகஸ்ட் 31ந் தேதி ஓர் விமானம் எத்தகைய அடையாளத்தையும் தாங்காது ஸ்பெயினின் சமீபத்தில் சென்ற ஒரு அமெரிக்கக் கப்பலின்மீது குண்டுகளைச் சொரிந்தது. இது அமெரிக்காவுக்கு ஸ்பெயின் மீது பகையை யுண்டு பண்ணச் செய்த வெளிநாட்டார் சூழ்ச்சியா யிருக்கலாம். இத்தகைய ஆபாச முறைகளைக் கையாளுவது ஐரோப்பாவில் சில தேசங்களின் இயல்பாகிவிட்டது. இந்த லக்ஷணத்தில் முசோலினியும் ஹிட்லரும் சேர்ந்து சமதர்மத்திற்கெதிராக சக்தி திரட்டப் போகிருர்களென்ற செய்தி கிளம்பியுள்ளது. இந்த சர்வாதிகாரிகள் இருக்கும் காலமளவும் போருக்குக் குறைச்சலில்லை.

## அப்துல்லா காந்தி வேலையாரம்பம்

ஜனுப் அப்துல்லா காந்தி மலையாள நாடு புகுந்ததும், கோரிவந்த காரியம் ஒன்றினை நிறைவேறத் தொடங்கிவிட்டது. ஆகஸ்ட் 30-ந் தேதி ஏறளுகுளத்தில் 31 ஈழவர்கள் முஸ்லிம் மதத்தைத் தழுவினர்கள். அவர்களின் தலைவர் மிஸ்டர் தப்பில் என்பாராவர். இவர் ஓர் ஹோமியோபதி டாக்டர். இவருக்கு இப்போது கமால் பாஷா தப்பில் என்று ஜனுப் அப்துல்லாவால் நாமகரணம் செய்யப்பட்டிருக்கிறது. மிஸ்டர் தப்பில் தாம் கனவில் கமால் பாஷாவாகி விட்டதோடமையாமல் மலையாளக் கரையில் 1000 முஸ்லிம் வட்டகைகளை நிறுவி, அதன் மூலம் முஸ்லிம்களின் பெருக்கத்திற்காக உழைக்கவும் போகிருராம். இதனைக் கேட்டால் முஸ்லிம் மதத்தில் அவர் கொண்டுள்ள ஆர்வம் மலைபோல் உயர்ந்ததென்று தோற்றும் நிற்கும். ஆனல் அவர் மனதினுள்ளிருந்து வார்த்தைகளை வெளியே கொட்டிக்

'திருச்சிக்கு' பின் ஸ்ரீ சத்தியமூர்த்தி



கொண்டிருப்பது ஜாதி இந்துக்கள் செய்த அட்டூழிய மென்பதன்றி வேறன்று.

**பிரசாரமல்ல**

டாக்டர் தய்யிலும் அவரது தோழர்களும் மதம் மாறியவன்று மாலையில் ஓர் பொதுக் கூட்டம் நடைபெற்றது. அதில் மிஸ்டர் P. A. சாநதின் என்பவர் மதம் மாறிய புதியாரை வரவேற்று ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினர். அச்சொற்பொழிவில், 'டாக்டர் தய்யில் கோஷ்டியாரை மறுமதம் புகுத்தியது முஸ்லிம்களின் பிரசாரமல்ல' வென்று குறிப்பிட்டார். நிச்சயமாகவும் பிரசாரமல்ல வென்பது எல்லோருக்கும் தெரியும். ஜாதி இந்துக்களின் வெறியே ஈழவ சகோதரர்களை பிற மதத்திற்குத் தாத்தியதாகும்.

**மீண்டும் சர்மா பட்டினி**

பண்டித ராமச்சந்திர சர்மாவை நேயர்கட்குத் தெரியும். அவர் ஜீவ காருண்யத்திற்காக உழைப்பவர் என்று சொல்லிக்கொள்கிறார். இதற்குமுன் இலமுறை சில ஆலயங்களின் சந்நிதியில் உண்ணுவிரத மிருந்து மிருக பலியை யொழிக்க முயன்றிருக்கிறார். போன வருடம் கல்கத்தா காளி கட்டத்தில் பல தினங்கள் பட்டினியிருந்து மிருகபலியை ஒழிக்க முயன்று கடைசியில் பண்டித மாளவியாஜி போன்றோர்களின் தலையீட்டால் விரதத்தைக் கைவிட்டார். இவ்வருடமும் அவர் காளிகட்டத்தில் உயிர்போகும் வரை பட்டினி ஆரம்பிக்கப் போவதாகச் செய்தி கிடைக்கிறது. இந்த முறை நிச்சயமாகவும் காளிதேவி அருள்புரிவாளென்று பலமாக நம்புகிறோம். காட்டில் எத்தனையோ பேர் பட்டினியாய்ப் போக, அவர்களெல்லோரையும் கவனியாதிருக்கும் காளிதேவி, ஏன் திரு. சர்மாவின் பட்டினிக்காக மட்டிலும் வருந்தி, மிருக பலியை ஒழிக்க திருவுளம் பற்றவேண்டுமென்பது புரியவில்லை. ஒருகால் ஒரு தர்மத்திற்காக அவர் பட்டினி கிடப்பதைக் கண்டு காளிதேவி இரங்கி விடுவாளென்று திரு. சர்மா கருதுவாரானல் ஏன் போன வருடம் அவருக்கு இரங்கவில்லை? பாவம்! சர்மா பிடிவாதமாயிருந்தால் தம் முயிரையே நஷ்டமாக்க நேரிடும். வைதிக வெறி ஒருவர் உயிருக்காக கரைந்து மாய்ந்து விடுவதல்ல,

# சென்னையில் இந்த வாரம்

(வருணன்)

**திருச்சி சம்பவம்**

என்ற கல்லானது காங்கிரஸ் என்ற மானசசரஸில் 'பொத்'தென்று விழுந்ததும், சரஸ் முழுதும் வட்ட வட்டமாக அலையெழும்பி சற்றுநேரம் கலக்க முற்றது. பல தலைவர்கள் என்ன விஷயமென்று உற்றுப்பார்க்க ஓடி வந்தார்கள். திரு. ராஜகோபாலாச்சாரியாரும், டாக்டர் ராஜனும் தாங்கள் தான் கல் விழுந்ததற்குக் காரண பூதர் என்று கூறிக்கொண்டு ஒதுங்கிக் கொண்டார்கள். இதுபோல ஒதுங்க வேண்டிய மற்றொருவருண்டு. ஆனல் அவர் அந்த காரியமொன்றைத்தான் செய்ய மாட்டார். அதுபற்றி இந்த விடத்தில் விரிவாக எழுத வேண்டாம்.

**மானசசரசில்**

அலையெழும்பியவுடன். வந்தவர்கள் காங்கிரஸ் தலைவர்கள் மட்டிலுமல்ல; வேறு பல தலைவர்களும் ஓடிவந்தார்கள். அவர்களில் சிலர் சரசின் மாகாத்மியம் தெரிந்தவர்கள்; வேறு சிலர் சரசின் அருமையை அறியாது வேறுவிதமாக மனதை லவத்திருப்பவர்கள். இந்த இரண்டாம் கோஷ்டியினர் தம் மனம் களிக்க கல் விழுந்ததோடு சரஸ் அழிந்து போகாதோ வென பேராசைப் பட்டார்கள்; கொட்டாவியும் விட்டார்கள். ஆனல் மானச சரஸ் அழியுமா? அது தெய்வீக ஊற்றும் எரியும் கலந்ததன்றோ? சற்று நேரத்தில் ஜலப்பரப்பு கலக்கம் தெளிந்து, குளிர் காற்றை வீசி, ஸ்படிகம் போல் பிரகாசிக்கலாயிற்று. கல்லை யெறிந்தவர்கள் அதனைத் தொழவும் செய்தனர். நிற்க,

**ஓடிவந்த**

காங்கிரஸ் அல்லாத தலைவர்களில் இருவர் குறிப்பிடத் தகுந்தவர்கள். அவர்கள்தான் டாக்டர் வரதராஜுலு நாயுடும், பாரிஸ்டர் ஜியார்ஜ் ஜோசபும். இருவரும் பழம் புலிகள்; காங்கிரஸில் போதுமான அளவு மூழ்கி நீந்திக் களித்துப் பாடு பட்டவர்கள். தமிழ் நாட்டாருக்கும் இந்தியருக்கும் சர்க்கார் ஒற்றர்கட்கும், ஸி. ஐ. டி. குறிப்புப் புத்தகங்கட்கும் தெரிந்தவர்கள். பல சிறைகட்கும் இவர்களைத் தெரியும். இவர்கள் வெளியே இருந்தாலும் மானசசரசில் கலக்கம் எழப் பொறுக்கவில்லை. உடன் ஓடி வந்து காங்கிரஸில் புகுந்து கொண்டார்கள்.

**புகுந்து கொண்ட பின்**

சென்ற ஞாயிறன்று இருவரும் சென்னை காங்கிரஸ் மண்டபத்தில் ஒரு மேடையில் பிரசங்கம் செய்தார்கள். அப்பிரசங்கத்தில் தாங்கள் ஏன் வந்தார்கள் என்பதற்கு காரணம் சொல்லப்பட்டது. காரியதரிசியாகிய திரு. கோபால் ரத்தினம் அவர்களை வரவேற்று உபசரித்து புகழ்ந்து உள்ளம் குளிர பேசினர்.

**ஏன் திரு ஜோசப்,**

டாக்டர் நாயுடு ஆகிய இருவரும் ஒன்றாக வர வேண்டும் என்றால் காரணம் நன்கு தெரியவில்லை. இருவரும் நீண்ட நாளாக சேர்ந்து ஒத்துழைத்தவர்கள்; திட்டம் போட்டவர்கள் என்பது காரணமாயிருக்கலாம். அத்துடன் இருவரும் ஒரே வருடத்தில் ஒரே மாதத்தில் ஒரே



(44-ம் பக்கம் பார்க்க)





# இலக்கியப்பகுதி

## உறுப்பு நலன் அழிதல்

(ராய. சொ)

வள்ளுவனரின் காமத்துப்பால் பதினெரும் அதிகாரம் "உறுப்பு நலன் அழிதல்" என்பது. பிரிவுத் துயரால் வருந்தும் காதலியின் அங்கங்கள் வாட்டமடைவதைக் கூறுவது இவ்வதிகாரம். உறுப்பு:—அவயவம்; நலன்:—அழகு; அழிதல்:—கெடுதல். உறுப்பு நலன் அழிதல்:—உடம்பின் கற்பகுதிகள் வனப்பு இழத்தல். காதலனைப் பிரிந்த காதலி, பிரிவுக் காலத்தில் மணந்தார் உயிருணும் மாலைப் பொழுதைக்கண்டு வருந்திய தன்மை சென்ற அதிகாரத்தில் கூறப்பட்டது. அவ்வருத்தம் பொங்கியெழ அவள் அங்கங்கள் சோர்வடைகின்றன. தலைவிக்கு உயிரனையாளாகிய தோழியால் தன்னுல் பெரிதும் போற்றிக் காக்கப்பெற்ற உறுப்பு நலன் அழிதலைப் பொறுக்கக்கூடவில்லை. தோழியானவள் தலைவி அழுதழத்தற் காற்றுளாகித் தலைவியை நோக்கி உரைக்கின்றாள்.

"சிறுமை நமக்கொழியச்
[சேட்சென்றார் உள்ளி
நறுமலர் நாணின கண்"

ஆற்றாமைச் சிறுமையை நம்மிடம் நிற்கவைத்து நீண்ட யாத்திரை போன அவரையே நீ நினைத்தலால், நின் கண்கள் நல்ல பூக்களுக்கு வெட்கமடையும் நிலைக்கு வந்துவிட்டன. குவளை தாமரை முதலான பூக்கள் அன்று நின் கண்களுக்குப் போட்டியிட வந்து ஆற்றாமல் தோற்று நாணமடைந்தது இன்று கதைதடாகிவிட்டது. அவைகளை வென்று பொலிவெய்தி விளங்கிய நின் அஞ்சனந் தோய்ந்த வாட்கண்கள் இன்று அழுதழுது அருவிபோல் நீருகுத்து ஒளியிழந்து கேவலம் அம்மலர் கட்குப் பின்னிடும் நிலையை எய்திவிட்டனவே.

"நயந்தவர் நல்காமை சொல்லுவ
[போலும்
பசந்து பனிவாருங் கண்."

நிறம் மாறுபட்டு நீர்க்கொட்டி நிற்கும் நின் கண்கள், நம்மால் விரும்பப் பட்டாரது அருளின்மையைச் சொல்லுவன போல்கின்றன. அம்மா! "சேர்ந்தவர்கள் செய்த பெரும் தீமையெல்லாம் பொறுத்தல்" வேண்டும்; அவர்களை உலகிற்குக் காட்டிக்கொடுத்தல் ஆகாது என நீ எண்ணிய போதிலும் நினது பறையறையும் கண்கள் விடமாட்டேனென்று வம்புசெய்து பிறர்க்கும் கேடுசெய்து தாமும் துன்புறுகின்றன. கண்கள் மட்டோ? நின் தோள்களும் பொல்லாதன.

"தணந்தமை சால அறிவிப்ப போலும்
மணந்தநாள் வீங்கிய தோள்."

காதலர் நீங்கியமையை நன்குக விளக்கச் சொல்லுவ போன்றிருக்கின்றன, மணந்த அந்நாளில் பருத்து இறுமாந்து நின்ற நின் தோள்கள். தலைவி! இது தகுமா? தோள்கள், மணந்த அன்று அவ்வளவு வீக்கம் கொள்ளவும் பிரிந்த இன்று இவ்வளவு தூக்கம் பெறுவதும் நியாயமன்று.

"பணிநீங்கிப் பைந்தொடி சோரும்
[துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள்."

வாழ்க்கைத் துணையைப் பிரிந்து அவர் சேர்க்கையால் பெற்ற அழகேயுமன்றி இயல்பான பழய அழகையும் இழந்த நின் தோள்கள், அவர் வாரா நாட்கள் மிகமிக, மேலும் பெருமை யிழந்து பசிய வளைகளையும் சோர விடுகின்றன. நீ அவரை மணந்த நாள் பெரிதும் வீங்கியதும் இத்தோள்களே. இன்று சொல்ல முடியாத வாட்டமடைவதும் இத்தோள்களே. தமக்குப் பெரும் பூரிப்பு நல்கியவராயிற்றே; அவரைத் தூற்றுதல் தகாது என்று இத்தோள்கள் கருதிற்றில. ஆம்! அவைகள் தாம் என் செயவல்ல? பொறுமைக்கும் எல்லையுண்டல்லவா? அவர் கொடுமை மிகுதிப்பட்டு விட்டது. சொல்லித் தீர வேண்டுவதைத் தவிர வேறென் என்று தோள்கள் கருதிவிட்டன.

"கொடியார் கொடுமை உரைக்கும்
[தொடியொடு
தொல்கவின் வாடிய தோள்."

தொடியொடு தொல்கவின் வாடிய தோள்:—வளையொடு பழய இயற்கையழகையும் இழந்த தோள்கள், கொடியார்:—தம்மைப் பிரிந்த கொடியாரது, கொடுமை உரைக்கும்:—வன்கண்மையைச் சொல்லுகின்றன. அவர் கூட்டுறவால் கிடைத்த அழகைவேண்டுமானல் அவர் குலைக்கலாம்; அதற்கு அவர்க்கு உரிமையுண்டென்று வைத்துக்கொள்வோம். இருந்த வெள்ளத்தை வந்த வெள்ளம் சேர்த்து அடித்துக் கொண்டு போன மாதிரி தொன்மையெழிலையும் அவர் பிரிவு பறிப்பதை எப்படித்தான் சகிக்க இயலும்! அது தவிர, இப்படிப் பிரிந்திருந்தால் என்ன நேரும் என்று அவருக்குத் தெரியாதா? கவவுக்கை நெகிழினும் ஆற்ற முடியா இயல்பை அவர் அறிந்தவரல்லவா? அங்ஙனம் அறிந்தும் அவருடைய இச்செய்கை வெறுக்கத் தக்கதே என்பதை—அக்கொடியார் கொடுமையை, உரைத்தே தீரவேண்டும் எனத் தோள்கள் நினைத்து விட்டன.

என்றின்ன பலவாறு தலைவிமேல் வைத்த தாங்கொணு அன்பு காரணமாகத் தலைவியின் உறுப்புநலன் அழிதற்கு ஆற்ருளாகித் தோழி சொல்லினள். தலைவனைப் பிரிந்து உறுப்பு நலன் அழியும் தலைவி கேட்டாள் தோழியின் இவ் உரைகளை. பிரிவுத் துயரால் எவ்வளவுதான் அம்மடக்கொடி வாடிய போதிலும் மற்றெருத்தி தம் ஆருயிர் நாயகனைக் குறைத்துப் பேசுவதைக் கேட்டுப் பொறுக்க வல்லாளா? தோழியிடம் பின்வருமாறு பேசினள்.

"தொடியொடு தோள்நெகிழ நோவல்
அவரைக்
கொடியர் எனக்கூறல் நொந்து."

எனக்கல்லவா தெரியும் என் கணவர் அருமை? பிரிவு பெருந்துன்பம் தந்த போதினும் என் ஆருயிர் அன்பரைத் தூற்றலாகாது என்ற காரணத்தால் நான் பொறுத்துக்கொண்டுதான் இருக்கிறேன். ஆனல் என் வயத்ததாகவில்லை என் தோள்கள். தொடியோடு தோள்கள் நெகிழுகின்றன. அணிகளைக் கழலவிட்டுத் தோள்கள் இளைக்கின்றன. அதுகண்டு நீ அவரைக் கொடியார் எனக் கூறுகின்ருய். நீ அவ்வாறு கூறுதற்கு நான் நொந்து வருந்துகின்றேன். அவர் பிரிவு தரும் இன்னலைவிட அவரைக் கொடியார் என நீ கூறும் மொழி எனக்குப் பெரும் துன்பந்தருகின்றது. எனவே, என் இனிய தோழி! நீ இனி அப்படிச் சொல்லாதே! என்று இயம்பிய தலைவி தம் மனத்தைப் பார்த்து வழுத்துகின்ருர்.

"பாடு பெறுதியோ நெஞ்சே
[கொடியார்க்கென்
வாடுதோள் பூசல் உரைத்து."

நெஞ்சே:—ஏ மனமே! கொடியார்க்கு:—கொடியார் என்று கூறப்படும் அவர்க்கு, என் வாடுதோள் பூசல் உரைத்து:—என்னுடைய மெலியும் தோள்களினல் உண்டாகும் ஆர்ப்பாட்டத்தை நீ சென்று சொல்லி, பாடு பெறுதியோ:—பெருமையடைய வல்லாயோ? என்மனமே! நீ அந்தப் பெருமையை அடைந்துதான் ஆக வேண்டும். இது செய்தல் நின் கடனேயாகும். நான் சும்மா இருந்தாலும் மற்றவர் விடமாட்டார்போலிருக்கிறது. அவர் தூற்றப்படுவதை நான் பொறேன்; பொறேன். இந்தத் தோளும் பிறவும் பொல்லாதன. அம்மம்ம! என்ன பாடு படுத்துகின்றன! மனமாகிய நீயாவது என்னேடு ஒத்துழைக்கலாகாதா? எனப் பரிதபித்தாள் உறுப்பு நலன் அழிந்த தலைவி. இவள் நிலை இங்ஙனமாக!

பிரிந்து சென்ற தலைவனுக்குச் சேர்ந்த நாள் இன்பமும் பிரிவின் துன்பமும் மனத்தை வாட்டுகின்றன. தனிவிடுத்துச் சென்ற தன் காதலியின் தனி பெருமையை மனக்கண்ணில் காண்கின்ருன். இவ்வாறு எண்ணமிடுகின்ருன்.

"முயங்கிய கைகளை ஊக்கப் பசந்தது
பைந்தொடிப் பேதை நுதல்."

அந்தோ! என்ன காரியம் செய்தேன்! என் இன்னுயிர்த் துணைவிக்குப் பெருந் தீங்கல்லவா இழைத்துவிட்டேன். அவள் நீர்மை மிக நுண்ணியதன்றே! முயங்கிய:—என்னைப் புல்லிய, கைகளை ஊக்க:—அவள் கைகளை அவளுக்குக் கை நோகுமென்று கருதி யான் சிறிது விலக்க, பைந்தொடிப்பேதை நுதல் பசந்தது:—பசிய வளையணிந்த என் பேதையின் நெற்றி உடனே நிறம் மாறிவிட்டது. இதனை அன்று யான் நேரில் கண்டனன் கண்களால். அச்சிறு இடை விலக்குக்கு ஆற்ருத அவள் இப்பிரிவை எவ்வாறு பொறுப்பாள்! அம்மட்டோ!

"முயக்கிடைத் தண்வளி போழப்
[பசப்புற்ற
பேதை பெருமழைக் கண்"

முயக்கிடை:—சேர்க்கையின் மத்தியில், தண்வளி:—சிறிய காற்ருனது, போழ:—சேர்க்கையை இடையே பிழக்க, பேதை பெருமழைக்கண் பசப்புற்ற:—பேதையினது அகன்ற மழைக் கண்கள் பசலை நிறமுற்றன. இப்படி எங்கள் இருவர்க்கிடையே சிறிய காற்று நுழைவதைக்கூடச் சகிக்கலாற்ருத அவள் கண்கள், இன்று எங்கள் இரண்டு பேருக்கும் நடுவில் காடும் மலையும் பிறவும் கிடந்து தடுப்பதை எவ்வாறு பொறுக்கும்? யான் கைகளைச் சிறிது விலக்கியவுடன் நெற்றி பசந்தது; காற்றின் நுழைவால் கண் பசந்தது. கைகளை நீக்கியதால் பசப்படைந்த—தனக்கு அணித்தே யிருக்கும் நெற்றியைக் கண்டு அதன் பசப்பில் தானும் பங்கு கொண்டு வருந்தியது கண்.

"கண்ணின் பசப்போ பருவரல்
[எய்தின்றே
ஒண்ணுதல் செய்தது கண்டு"

நெற்றி செய்த பசப்பைக் கண்டு பசந்த கண் இன்னும் வருந்தியது. இப்படி எனது பிரிவறியாக் காதலியின் உறுப்புக்கள் நான் உடனிருந்த நாளிலேயே சிறு சிறு நிகழ்ச்சிகளால் அழிந்ததைக் கண்ட நான் அவைகளின் தன்மையுணராமல் இப்பிரிவைத் தந்தது பிசகான காரியம்; இனி அவளை விரைந்து அணுகுதல் வேண்டும். என முடிவு கட்டுகின்ருன் காதற் செல்வன்.



# ஸ்ரீ சத்தியமூர்த்தி முன் பட்டினிப் படை

"வருணன்"


திரு. எஸ். சத்தியமூர்த்தி

'ஸ்ரீ சத்தியமூர்த்தி முன் பட்டினிப் படை' என்றதும் மலையாளத்து பட்டாளத்தினர் திரு. சத்தியமூர்த்தி முன் நிறுத்தப்பட்டு விட்டார்களோவென்று கருதிவிட வேண்டாம். அவ்வாறு நிறுத்தும்படியாக திரு. சத்தியமூர்த்திக்கு இன்னும் எதுவும் வந்துவிடவில்லை. அவர் தமிழ்நாட்டு காங்கிரஸ் தலைவரென்ற முறையில், பட்டினிப் படையின் தலைவர், திரு. கோபாலன் ஒருநாள் அவரைப் பார்க்கப் போனர். தம் வருகை சம்பந்தமாக ஏதோ சில சில விஷயங்களைச் சொல்ல வேண்டுமென்பதுதான் திரு. கோபாலனின் கருத்து. அதனை 'தென்னாட்டுத் தலைவர்' எப்படி நினைத்தாரோ! உருசியாக ஏற்றுக் கொள்ளவில்லை. ஒரு வேளை பட்டினியாக வந்தவரோடு ஏன் ஒரு எம்.எல்.ஏ., பேச வேண்டுமென்று நினைத்து விட்டார் போலும்! நான்கு நிமிஷத்திற்குமேல் பேட்டி கொடுக்க அநுமதிக்கவில்லையாம். ஆயுதப் படையின் மத்தியில் அல்லும் பகலும் பொழுதுபோக்கும் ஹிட்லர்கூட கெய்க்வார் அரசருடன் 25 நிமிஷ நேரம் சிரித்துக் களித்துப் பேசினர். அந்த மனதைக்கூட திரு. ச. மூர்த்தியார் காண்பிக்கவில்லை. ஒருகால் அவருக்கு ஹிட்லரைவிட நெருக்கடியான வேலை யிருந்திருக்கலாம்.

எப்படியும் திரு. கோபாலன் மனம் சுண்டிப் போய்விட்டது. மிக கோபமாக பேசினர் ராயபுரத்தில். அப்பேச்சில் திரு. சத்தியமூர்த்தியவர்கள் பட்டினிப் படைக்கு எந்தவிதமான உதவியும் செய்ய முடியாதென்று மறுத்து விட்டாரெனவும், வேண்டுமானல் தர்மத்திற்கு ஒருநாள் நகரில் சாப்பாடு போடலாமென்று சொன்னரெனவும் கூறினர் திரு. கோபாலன். சென்னையில் ஒரு நாள் சாப்பாடு போடலாமென்று கூறினரென்பது எவ்வளவு தூரம் உண்மையென்று விளங்கவில்லை, ஒருகால் தன் செலவில் போடலாமென்ருரோ அல்லது வேறு யாரையாவது போடச் செய்யலாமென்று கருதிச் சொன்னரோ! திரு. கோபாலன் கூறிய வார்த்தைகளை அப்படியே கவனித்தால் ஏதோ சென்னைக்கே திரு. சத்தியமூர்த்தி எப்படியோபட்ட ஒருவர்போல் தொனிக்கிறதன்றே?

தொனிக்கட்டும். அவர் தர்மத்திற்காக சாதம் போடலாம் என்று சொல்லியிருந்தாலும் அது மிகவும் அருவருப்பான வார்த்தையே. பட்டினிப்படை தர்மம் வாங்குவதற்காக இங்கு வரவில்லை. விசேஷமாகவும் திரு. சத்தியமூர்த்தியிடம் பிச்சை வாங்குவதற்காக வரவில்லை. சட்டசபையில், நாட்டு நிலைமையை எடுத்துக்காட்டவே படையினர் 700 மைல் நடந்து வந்தார்கள். அப்படிப்பட்ட ஒரு ஜதாவுக்கு தர்மம் தருகிறேனென்ற திரு. சத்தியமூர்த்தி கூறினரென்பது உண்மையானல் அவர் அவ்வப்போது ஆங்காங்கு வெளியிடும் சில வார்த்தைகளோடுதான் இதனையும் எழுதி வைக்கவேண்டும்.

அம்மம்மா! திரு. சத்தியமூர்த்தியவர்கள் புதிதாக சென்னைக்கு வந்த பட்டினிப் படையிடத்திலும்கூட பெயர் வாங்கிக்கொண்டு விட்டாரே.

அவர் தமிழ் நாட்டு காங்கிரஸ் தலைவர் என்ற நிலைமையில், தவருகவும் வெறுப்பாகவும் உதாசீனமாகவும் பேசினரா, அல்லது தம் சொந்த ஹோதாவில் பேசினராவென்பது புலனுகவில்லை. தலைவரென்ற நிலையில் பேசியிருந்தால் மிகவும் அருவருக்கவே வேண்டும்.

பட்டினிப்படை சென்னை வந்தவன்றே நகர காங்கிரஸ் காரியதரிசியாகிய ஒருவரும், கமிட்டி மெம்பராகிய ஒரு பத்திரிகாசிரியரும், அதனை (படையை) மகாஜன சபை சார்பிலும், நகர காங்கிரஸ் சார்பிலும் வரவேற்றுப் பேசினர்கள். காங்கிரஸ் சோஷலிஸ்ட் கட்சி சார்பிலும் வரவேற்கப்பட்டது. இதோடு காங்கிரஸ் மண்டபத்திலேயே வரவேற்கவும்பட்டது. இப்படியெல்லாமிருக்க, 'தலைவர்' திரு. சத்தியமூர்த்தி மட்டிலும் ஏறுமாருக பட்டினிகளுடன் நடந்து கொண்டாரானல் அவர் செயல் தன்னேடு ஒத்துழைக்கும் தோழர்களின் செயலுக்கு முற்றிலும் முரண் பட்டதென்பதில் ஆச்சரியமே இல்லை. இந்த வொன்றே நவஜீவன் கட்சிக்கு (திரு சத்தியமூர்த்தி ராஜிநாமா செய்துவிட வேண்டுமென்ற கக்ஷி) வலுவளிக்கப் போதுவதாகும்.

# நீரில் மிதக்கும் டாங்க்

'நீரில் மிதக்கும் டாங்க்' என்பது தான் பிரிட்டன் சமீபத்தில் சட்ட நினைக்கும் இரு நவீன யுத்தக் கப்பல்களின் பெயர். சர் சாமுவெல்ஹோர் வெளியிட்ட ஒரு அறிக்கையால் அந்த உண்மை விளங்குகிறது.

விமானம் மூலம் குண்டெறிந்து அழிக்கப் பார்த்தால் அவ்விரு கப்பல்களையும் அசைக்கவும் முடியாது. குண்டுகட்கும் அக்கப்பல்கட்கும் சம்பந்தமில்லாதது போல் தோற்ற வேண்டும். புகைக் குழாய்க்குள் எதிரிகள் குண்டுகளை வீசி கப்பலை அழித்துவிட முயலலாம்; ஆதலால் அதற்கு (புகைக் குழாய்க்கு) ஓர் தனிப்பட்ட மூடியைப்போட்டு காப்பாற்ற முயலவேண்டும். கப்பலின் மேன்மாடிகள், திறந்த வெளிகளெல்லாம் தனியான கூரைகளால் பாது காக்கப்பட வேண்டும். பெரிய இயந்திரப் பீரங்கிகளால் தாக்கினாலும் கப்பலை உடைக்க முடியாமலிருக்க வேண்டும்—என்பவைதான் புதிய கப்பல்களில் இயற்றப்படும் புதுமை.

## ஒரே ராட்டில் ஏழு நூல்

சௌமுஹானியில் இப்போது வேலை பார்த்து வருபவரும் வங்காள நோவா பரேடிவ் இலாகாவின் சாயத் தொழில் நிபுணருமாகிய ஜனாப் ஸையத் அஸ்ராபுல் ஹோஸைன் என்பவர் ஒரு புதிய சர்க்காவைக் (ராட்டை) கண்டு பிடித்திருக்கிறார். அதில் ஏககாலத்தில் ஏழு நூல் செய்யலாம்.

மிஸ்டர் ஹோஸைன் அதனை பல நிபுணர்களின் முன்பு சோதனை காண்பித்திருக்கிறார். எல்லோரும் அதனைப் புகழ்ந்தனர். ஜனாப் ஹோஸைன் அந்த ராட்டைப் போல் பலவற்றைச் செய்து எளிய விலைக்குக் கொடுக்க நினைக்கிறார்.

## உலகில் பெரிய ஒலிபரப்பி

உலகில் பெரிய ஒலிபரப்பி யொன்றை மினியோலா ரூஸ்வெல்ட் ரேஸ்வேயில் (அமெரிக்கா) நிறுவப் போகிறார்கள். அது இடி யோசை யெழுந்தாலும் கலக்கமுறாது அதனையும் வென்று ஒலிக்கும். ஒரு மைல் தூரம் வரையிலும் மிகத் தெளிவாக அதன் தொனி கேட்கும்படி அமையும்.

இந்த ஒலி பரப்பியை இயக்குவதற்கு 20 ஆயிரம் வாட் பவருள்ள மின்சாரம் தேவைப்படும்.

ஒலி பரப்பியின் முகத்தில் 140 டிஸிபெல்ஸ் ஓசை உற்பத்தியாகும். (ஒரு டிஸிபெல் என்பது சாதாரணமாக ஒரு மனிதன் கேட்பதற்குப் போதுமான அவ்வளவு ஒலி யழுத்தத்தின் பெயர்.)

உலகில் மிக உச்சமாக சத்தமிடத் தகுந்த மனிதக் குரல் 86 டெஸிபெல்ஸுக்கு மேலிருப்பதில்லை. மிகப் பெரிய இடியோசை 105 டெஸிபெல்ஸ்தானிருக்கும். ஆகாய விமானத்தின் ஓசை 123 டெஸிபெல்ஸ்.

உலகில் இதுகாறுமெழுந்த மிகப் பெரிய சத்தம் 1883-ல் கிராகடா எரிமலை உடைந்தபோது உண்டான ஓசைதானென்று சொல்லப்படுகிறது. அது 190 டெஸிபெல்ஸ் உடையது தான்.

## ஹென்ரி போர்டின் நவீனம்

ஹென்ரிபோர்டு இவ்வருடம் செய்து வரும் தம் இயந்திரசாலை அபிவிருத்தித் திட்டத்திற்காக 3 கோடி 70 லட்சம் டாலரை ஒதுக்கியுள்ளார். அத்திட்டப்படி 1 லட்சத்து 10 ஆயிரம் கிலோ வாட்டை உற்பத்தி செய்யும் மின்சார நிலையம் ஏற்படுத்தப்படும். அப்படியானால் தொழிற்சாலைக்கு 3 லட்சத்து 26 ஆயிரம் குதிரை பவர் கிடைக்கக் கூடும். அப்படியானால் உலகில் பெரிய சக்தியுள்ள தொழிற்சாலை போர்டினுடையதாகவே இருக்கும்.

## மிருகத்திற்கும் முகமூடி

பிரிட்டன் உள்நாட்டு சர்க்கார் காரியாலயம் யுத்த காலங்களில் ஜனங்கட்கு விஷப்புகை மூடிகளை நல்குவதோடு அருமையாக வளர்க்கும் மிருகங்கட்கும் கொடுக்க முடியுமாமென்று யோசித்து வருகிறார்கள். நாய்கட்கு முகமூடிகள் செய்யும் விஷயத்தை சர்க்கார் மறந்துவிடவில்லை என்று சர். ஜான் ஸைமன் சமீபத்தில் சொன்னார்.

## டெய்லர் ஆச்சரியம்

மனிதர்களின் உடம்பின் சூட்டை அளக்க உஷ்ணமானி இருப்பதுபோல் தேனீக்களின் உடம்பின் சூட்டையும் அளக்க ஒரு உஷ்ணமானியை (தெர்மாமீட்டரை) அமெரிக்க பிரௌன் சர்வகலாசாலை பண்டிதர் ஐவான் R. டெய்லர் செய்திருக்கிறார். அது மிக மிக நுட்பமானது. அந்த கருவியால் தண்ணீர் பனிக்கட்டி வடிவத்திலிருந்து கொதிக்கும் நிலைமைக்கு வரவேண்டுமானால் ஒரு தேனீயின் உடம்பிலிருந்து ஏழுநாளைய உஷ்ணம் தேவைப்படுமென்று கண்டு பிடித்திருக்கிறார்.

## சூரியனே வியாபாரத் திருடன்

வியாபாரம் அபிவிருத்தி யடைவதற்கும் வீழ்ந்து போவதற்கும் சூரியனே காரணமென்கின்றார் டாக்டர் ஹார்லன் ட்ரூஸ்டெட்சன். அவரைப்போல் தோழரான டாக்டர் லோரிங்பீல் ஆண்ட்ரூசும் அபிப்பிராயப்படுகிறார்.

இருவரும் ஹார்வார்டு சர்வகலாசாலை பண்டிதர்கள். இவர்கள் செய்த பரிசோதனையால் சூரியனில் காணப்படும் மறு (கருப்புக்கோடு) பெருகப் பெருக வியாபாரம் அதிகரிக்கிறதென்றும் குறையக் குறைய வியாபாரமும் குறைகின்றதென்றும் விளங்கிற்று. இந்த முறைப்படி 1938க்கும் 39க்கு மிடையில் வியாபாரம் மிகவும் விருத்தியாகப் பிரகாசிக்கும் என்று தெரிகிறது.

(சூரியனில் ஏற்பட்டிருக்கும் வெடிப்பே கருப்புக் கோடு. சூரியன் தன்னை சுற்றிக் கொள்வதால் நம் கண்கட்கு சில காலத்தில் நன்றாகவும், சில காலத்தில் மறைந்தும் தெரிகிறது.)

## 8 கோடி நக்ஷத்திரம்

Milky way யில் 8 கோடி நக்ஷத்திரங்கள் உண்டு என்று கணக்கெடுத்திருக்கிறார்கள்.



# அங்கமுத்து - அநந்தன்

அல்லது

# களர் நிலம் கண்ட காரிகை

—— "அழகன்" ——

ஆண்டில் சிறியவள்தான் அங்கமுத்து; ஆனால் அறிவில் பெரியவள். எந்த காரியஞ் செய்வதற்கும் முன்னால் அவள் ஆய்ந்தோய்ந்து பார்ப்பது வழக்கம். அவள் வயதுடைய பலருக்கு ஆராய்ந்து பார்ப்பது விலக்காக இருக்கலாம். ஆனாலும் அங்கமுத்துவை அந்தத் துறையில் ஒரு விசேஷப் பிறவியாகவே கருதவேண்டும்.

அழகும் அறிவும் பொருந்தியிருப்பதில்லை என்பது பலர் எண்ணம். இருந்தாலும் அந்த வகையிலும் அங்கமுத்து விஷயமோ அலாதி. எப்போதும் எதையாவது பற்றி சிந்தித்துக் கொண்டே இருப்பாள் அங்கமுத்து; அதுவும் ஆழ்ந்து. 'இளங்கன்று பயமறியாது' என்பதுபோல மற்றப் பள்ளிப் பெண்கள் ஓடியாடி விளையாடிக் கொண்டிருக்குஞ் சமயத்தில்கூட அங்கமுத்து தனித்து எதையாவது சிந்தித்துக்கொண்டு அமைதியாக இருப்பாள். வகுப்புகளிலும் அதற்குக் கொஞ்சமும் மாறுபாடு இருக்காது. அவ்விடத்தில் கூட படபடப்பை அவளிடம் எதிர்பார்க்க முடியாது.

படபடப்பில்லாததினால் அங்கமுத்துவை மக்கென்று சொல்லிவிட முடியாது. வாத்தியார் தந்த பாடங்களைச் சரிவர ஒப்புவிப்பாள். மனக்கணக்கு போட்டு வருவதிலும் அவள் தான் முதல். வகுப்பில் கேட்டக் கேள்விக்கு விஷயத்தை உணர்ந்து சரியான விடை கூறுபவளும் அவள் தான். அதிகம் கூறுவானேன்? அரைக் குடம் போல இல்லாமல் நிறைக்குடம் போல நிலயாக இருந்து வந்தாள் அங்கமுத்து.

வீட்டிலும் அங்குமுத்து ஒரு தனிப் போக்குடையவளாகவே இருந்தாள். அவளுக்குத் தன் பெற்றோர்களிடத்திலே அளவு கடந்த அன்புதான். இருந்தாலும் வெளிக்குத் தெரியும்படியாக அதை மேல்லெல்லாம் வாரி பூசிக் கொள்ள மாட்டாள். எனவே அதனால் பெற்றப் பெண் என்னும் பாத்தியத்தில் அவள் பெற்றோர்களுக்கு ஓர் வகையில் உள்ளூர மகிழ்ச்சியிருந்த போதிலும், அங்கமுத்துவிடத்தில் கொஞ்சம் அதிருப்தியும் இருந்துக்கொண்டு தான் இருந்தது. இருந்தாலும் அதை அவ்வளவாக அவர்கள் வெளிக்குக் காட்டுவதில்லை.

அங்கமுத்து தனித்துப் பிறக்கவில்லை. இளையவனான ஒரு சின்ன சகோதரனும் அவளுக்குண்டு. அவன் அவளிடத்தில் அளவு கடந்த அன்பையே காட்டிவந்தான். மாலையில் பள்ளியிலிருந்து அங்கமுத்து வீடுதிரும்பினதும் தன் தாய் அன்பாகத் தரும் சிற்றுண்டியை உண்டு விட்டு, ஐந்துபிராயமுடைய சேகரனையும் உடன் அழைத்துக் கொண்டு மேல் மெத்தைக்குச் சென்று விடுவாள் விளையாட. தன் இயல்புக்கு மாறாகவே அங்கமுத்து சேகரனிடம் சிரித்து விளையாடிக் கொண்டிருப்பாள். அதை மறைந்திருந்து பெற்றோர்கள் கண்டு இன்பக்கடலில் மூழ்குவார்கள். என்ன இருந்தாலும் உடன் பிறப்பல்லவா சேகரன்? அதிலும் பால்மணமாறாத சிறுவன்! ஆகையால் அங்கமுத்து எப்படி தன் இயல்பான அமைதியைக் காட்டக்கூடும் சேகரனிடம்?

அப்போது அங்கமுத்துக்கு வயது பத்திருக்கும். ஒரு நாள் பள்ளியிலிருந்து வீடு திரும்பினாள். வழக்கம் போலவே, தன் சிறு தம்பியை உடன் அழைத்துக்கொண்டு மேல் மெத்தைக்குச் சென்றாள் விளையாட. அப்படியே ஐந்து நிமிஷம் ஆகியிருக்கும். இருந்தாற்போல் இருந்து சேகரன் ஓவென்று கூச்சலிட்டு அழ ஆரம்பித்தான். அவன் அழும் காரணம் அங்கமுத்துக்குத் தெரியவில்லை. அவனைக் கேட்டால் காலைக் காட்டினான். குனிந்து கீழ் நோக்குகையில் கட்டெறும்பு ஒன்று ஓடி மறைவதைக் கண்டாள். கண்டதும் விஷயம் புலனாகிவிட்டது அங்கமுத்துக்கு. எறும்பை அடிக்கிறேனென்று பயமுறுத்திவிட்டு சேகரன் அழுகையை ஓயவைத்தாள்.

சிறுவன் அழுகைக்குப் பரிகாரம் தேடிக் கொண்டிருக்கும் பொழுது, அழுகுரல் கேட்ட தாய் விரைந்தோடி வந்தாள் அவ்விடத்திற்கு. ஆம்; அது சமயம் தாயின் கண்களில் நீர் ததும்பிக்கொண்டுதான் இருந்தது.

தாய் வருவதற்கும் சிறுவன் வாய் மூடுவதற்கும் சரியாக இருந்தது. தாயைக் கண்டதும் தாவிச் சென்றான் தாயிடம் சிறுவன். மகள் மூலம் விஷயத்தை உணர்ந்த தாய் வாய் விட்டு சிரித்துவிட்டு, சேகரனைக் கேலியாக ஒரு மிரட்டு மிரட்டினாள். பின் தாவி தன்னையடைந்த மகனை வாரி யெடுத்து முத்தம் தந்து இடுப்பில் வைத்துக் கொண்டாள். வெளியில் சென்றிருந்த பெரிய ஐயாவும் அவ்விடத்திற்கு வந்தார். மனைவி அவரிடத்தில் நடந்த விஷயத்தைச் சொல்லினதும், கேலியாக சேகரனைப் பார்த்து அவரும் சிரிக்க, மற்றவர்களும் சிரித்தார்கள்.

கீழே வேலையிருக்கிறதென்று சொல்லி விட்டு தாய் சேகரனை எடுத்துக்கொண்டு போய் விட்டாள். தந்தையும் சில நிமிஷங்களுக்கெல்லாம் மகளான அங்கமுத்துவைத் தனிமையில் விட்டுவிட்டு அகன்றார்.

அப்போது சுமார் மணி 5-30 இருக்கும். பகலவன் இன்னும் மறையவில்லை. மேல் வானம் சிவந்து காணப்படுகிறது. இந்நிலையில் தன்னையும் மறந்து தன் தோட்டத்தில் எதையோ உற்று நோக்கிக் கொண்டிருந்தாள் அங்கமுத்து. அவள் கருத்தைப் பற்றி ஈர்த்தது ஒரு கிழவனின் தோற்றம். அங்கமுத்தைப் பற்றி ஈர்த்தது அக்கிழவனின் தோற்றமல்ல; ஆனால் அதுசமயம் அவன் செய்து கொண்டிருந்த தொழில்தான். அங்குமுத்து வயதுதான் அவனுக்கும் இருக்கும். இருந்தாலும் அவனுக்கிருந்த பசுமையோ, உற்சாகமோ அவனிடத்தில் காணவுமில்லை. அவனுடைய கண்கள் குழிவிழுந்து கிடந்தன



பார்வையும் மங்கிக் கிடந்தது. முகத்தில் ஒளி கொஞ்சமும் கிடையாது. வெறும் எலும்புரு போன்று இருந்தான் அவன். அவன்பெயர் அநந்தன். அங்கமுத்து வீட்டு வேலைக்காரன். சமீப காலத்தில் வேலைக்காரனாக அவள் வீட்டுக்கு வந்தவன்.

அநந்தனைக் கண்டதும் அங்கமுத்துவின் பச்சை உள்ளத்தில் பலப்பல எண்ணங்கள் தோன்றலாயின. அவன் வேலைக்குப் புதியவனாகையால், அவனைப்பற்றி அவளுக்கு அதிகம் தெரியாது. சிறியவனாக இருந்தும் ஒரு சுமைத் துணிகளையும் அவன் ஒருவனாகவே எப்படித் துவைக்கிறான் என்பதை நினைந்தாள். அவனுக்குக் கைகள் வலிக்காதா என்று கருதினாள். தான் மாத்திரம் வேலை செய்யாமல் இருக்கும்பொழுது அவன் மாத்திரம் ஏன் வேலை செய்கிறான் என்பதை எண்ணினாள். அவன் படிக்க ஏன் பள்ளிக்குச் செல்லக்கூடாதென்று சிந்தித்தாள். அவனுக்குத் தாய் தந்தையர்கள் இல்லையோ என கவன்றாள். சிற்றெறும்பு கடித்ததால், அழுத மகனை ஆறுதல் செய்து அன்பாய் அணைத்துக்கொண்ட தன் தாய் போன்று அநந்தனுக்குத் தாயில்லையா என்று ஏங்கினாள். அவள் உள்ளத்தெழுந்த ஒரு சந்தேகத்திற்காவது தெளிந்த விடை பெற்றாளில்லை. சிறிய உள்ளம் எவ்வாறு விடைபெறும்? காட்சி கண்ணை உறுத்தலாம்; நெஞ்சை அள்ளலாம்; ஆனால் காரணத்தைப் பகுத்துணர ஆற்றல் கொடுக்குமா? என்ன இருந்தாலும் அங்கமுத்து சின்னஞ் சிறு பெண்தானே? வெயிலோன் மறைந்தான். இருள் கப்பிக்கொண்டது. நிலைமையை ஒருவாறு உணர்ந்து அங்கமுத்து குழம்பிய மனத்துடன் கீழிறங்கிப் போனாள். அதுமுதல் அநந்தனிடம் ஓர்வித அன்பு—இல்லை—பச்சாதாபங் கொண்டாள்.

சில நேரங்கழித்து உபாத்தியாயினி வந்தாள் அங்கமுத்துக்குப் பாடஞ் சொல்லிக் கொடுக்க. வழக்கம்போலில்லாமல் அங்கமுத்து அன்று ஒரு மாதிரியாக இருந்தாள். அவள் கோலத்தின் காரணத்தை அறியாத ஆசிரியை பேந்தப் பேந்த விழித்தாள். கடைசியில்



அங்கமுத்துக்கு ஓய்வு விட்டுவிடுவதென முடிவிக்கு வந்து ஆசிரியை, அங்கமுத்துக்கு உடம்பு நலமில்லையென்று அவள் தாயிடம் சொல்லிவிட்டு தன் வீடு சென்றுவிட்டாள்.

உண்மை உணராது பதைத்த தாய் அங்கமுத்துவிற்கு திஷ்டி கழித்தாள். பயந்துவிட்டாள் என்று எண்ணி அங்கமுத்துக் கையில் கங்கணம் கட்டப்பட்டது. ஏழுமலையானுக்கு பிரார்த்தனை செய்யப்பட்டது. வைத்தியனும் வரவழைக்கப்பட்டான். அதற்குள் வெளியே சென்றிருந்த தந்தையாரும் வீட்டுக்கு வந்தார். விஷயத்தை அறிய வந்ததும் விரைந்து சென்று மகளைக் கண்டார். அவரும் உண்மை உணராது ஏங்கித் தவித்தார். இவ்வளவு உபசாரங்களும், மருந்துவங்களும், பிரார்த்தனைகளும் அங்கமுத்து கொண்ட நோயைத் தணிக்கவில்லை. 'கடப்பறை'யை விழுங்கிவிட்டதற்கு சுக்குக் கஷாயமா பரிகாரம்?

சோர்வுபட்ட முகத்தோடு அங்கமுத்து கொஞ்சம் பாலைப் பருகிவிட்டு படுக்கைக்குச் சென்றாள். ஆனால் அவளுக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. கொண்ட களைப்பினால் கடைசியாக அயர்ந்து தூங்கினாள். அது சமயம் அங்கமுத்து என்னென்னமோ ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாமல் பிதற்றினாளாம்.

பொழுதும் புலர்ந்தது. வழக்கமாக அதிகாலையில் எழுந்திருக்கும் அங்கமுத்து அன்று அதிக நேரங் கழித்தே துயிலெழுந்தாள். அது சமயம் தந்தை சிவாநந்த முதலியாரும் மகளைக் காண அறையினுள் வந்தார். மகள் கண் விழித்துப் பார்ப்பதைக் கண்டதும் அருகில் நெருங்கி உட்கார்ந்தார். நேற்றுக் கொண்டிருந்த சோர்வு போலல்லாமல், கொஞ்சம் தெளிவும் கொண்டிருந்தது அவள் முகம். தந்தை வரக் கண்டதும் அங்கமுத்து புன்முறுவல் பூத்தவண்ணம் தகப்பனாரை தன் சிறு 'மங்கிய' கண்களால் நோக்கினாள். அவரும் உள்ளுக்குள் மகிழ்ந்தவராய் ஆருயிர் செல்வியைப் பார்த்து, "அம்மா அங்கமுத்து! ஏனம்மா நேற்று ரொம்ப சோர்வுபட்டிருந்தாய்?" என்று அன்பாக வினவினார்.

அங்கமுத்துவும் மெல்ல நகைத்து, "ஒன்றுமில்லை யப்பா!" என்று சொல்லி பெருமூச்செறிந்தாள்.

"என்னம்மா என்றுமில்லாத முறையில் பேசுகிறாய்? சிறு நகைப்பிலும், நெடுமூச்சிலும் உண்மையை மறைக்க முயல்கிறாய்?" என்றார் தகப்பனார்.



"என்னைக் கேலி செய்யாமல் இருப்பதானால் உள்ளதைச் சொல்லுகிறேன். என் உள்ளத்தை வருத்திக் கொண்டிருக்கும் விஷயத்தையும் உங்களிடம் வெளிப்படுத்துகிறேன்" என்றாள் அங்கமுத்து.

"ஏதம்மா பெரிய விஷயம் போலிருக்கிறது? என்னமோ சொல்லம்மா பார்ப்போம்."

"ஆமப்பா! நம் வீட்டில் வேலை செய்கிறானே அநந்தன்! அவன் ஏனப்பா அவ்வளவு கஷ்டப்பட்டு வேலை செய்யவேண்டும்? எவ்வளவு துணி துவைக்கிறானப்பா! அதைப் பார்க்கவே எனக்கு பயமாக இருக்கிறதப்பா! அவ்வளவு துணியையும் துவைக்கிறானே, அவன் கைகள் வலிக்காதா அப்பா?" என்றாள் அங்கமுத்து விட்டுவிட்டு.

"இதானம்மா நீ கேட்க இருந்த கேள்விகள்? உழைக்காமல் போனால் யாரம்மா உணவு தருவார்கள்? சோறு வேண்டுமானால் எல்லாரும் வேலை செய்துதானே அம்மா ஆகவேண்டும். கை வலிக்குமென்று அவ்வளவு துணியும் துவைக்கவில்லையானால், அவனுக்கு யாரம்மா சோறு போடுவார்கள்?" என்றார்.

"இருங்க! இருங்க! அப்பா! எல்லாரும் உழைத்தால்தான் சோறு என்று நீங்க சொல்லுகிறீர்களே, நான் ஒன்றுமே வேலை செய்கிறதில்லையே அப்பா!" என்றாள் சிறுமி.

"உனக்கு அம்மா அப்பா இருக்கா! அநந்தனுக்கு அவர்கள் ஒருவருமில்லை. அதனால்தான் அவன் வேலை செய்கிறான்!" என்றார் தகப்பனார்.

"அப்படியானால் ரொம்ப சரி அப்பா! நம் வண்டிக்கார பெரியாண்டிக்கு அம்மா அப்பா அனைவரும் இருக்கிறார்களே, அவன் ஏனப்பா வேலை செய்கிறான்?" என்றாள் சிறுமி.

"ஓ! அவன் கதையா! அவன் ஏழையம்மா! அது மாத்திரமா? அவன் அம்மா அப்பாகூட பரம ஏழைகளம்மா! அதனால்தான் அவனும் வேலை செய்கிறான். அவன் அம்மா அப்பாவும் கஷ்டப்பட்டு வேலை செய்து பிழைக்கிறார்கள்."

"ஓ ஓ! 'ஏழை' என்று வேறு இருக்கிறதா? 'ஏழை' என்றால் என்னப்பா?"

"ஏழை என்றால் சொத்தில்லாதவர்கள் என்று அர்த்தமம்மா! பிறக்கும்பொழுதே அவர்கள் ஏழையாகப் பிறந்தவர்களம்மா!"

"அப்படியா சங்கதி! நான் பிறக்கும்பொழுது சொத்து ஒன்றும் உடன் கொண்டு வரவில்லையே அப்பா! அதைப்போலத்தானே அப்பா நீங்களும் பிறந்திருக்கவேண்டும்!" என்றாள் அங்கமுத்து.

சிறுமியின் சொற்கள் காதில் விழுந்ததும் பெரியவர் என்ன உத்தரம் சொல்வதென்று தெரியாதவராய் கொஞ்ச நேரம் 'திறுதிறு' என்று விழித்துவிட்டு, "அதற்கெல்லாம் என்னம்மா நாம் செய்வது? எல்லாம் கடவுள் செயல். அவனன்றி ஓர் அணுவும் அசையாது. முன் செய்த தீவினை இன்று மூண்டுவிட்டது. அவனவன் தலை எழுத்தை அனுபவிக்க வேண்டியதுதானே!" என்று கூறிவிட்டு சரேலென எழுந்து அறையைவிட்டு வெளியே சென்றுவிட்டார்.

அங்கமுத்துவின் கலக்கத்திற்கு அப்பாவின் பதில் அருமருந்தாக இருக்கவில்லை. அவர் கடவுள்மீது போட்ட பழி அங்கமுத்துவை கடவுள் மீதும் வெறுப்பு கொள்ளச் செய்துவிட்டது. நினைத்த தோண்ட பூதம் புறப்பட்டது போன்றும், பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்தது போன்றும், கொண்ட சந்தேகத்தைப் போக்கிக்கொள்ள முயன்ற அங்கமுத்து இன்னும் அதிகம் குழம்பிய நிலையையே அடைந்தாள்.

ஆண்டுகள் பல சென்றன. அநந்தன் துணி துவைப்பதைக் கண்டு அவன்மீது கொண்ட பச்சாதாப உணர்ச்சி வரவர வலுப்பெற்று விட்டது அங்கமுத்து உள்ளத்தில். முதலில் கொண்ட வெறும் கருணை முடிந்த அன்பில் கொண்டுபோய் விட்டுவிட்டது அங்கமுத்துவை. ஒத்த வயதும் ஒத்த அன்பும் உடையவர்களானார்கள் இருவரும். இருவரிடையும் ஏற்பட்டு வரும் நேசத்தைக் கண்ட அங்கமுத்துவின் தந்தை சிவாநந்த முதலியார், மகளிடம் பேச்சு நடந்த ஓராண்டிற்கெல்லாம் அநந்தனை வீட்டை விட்டு வெளியேற்றி விட்டார். அதன் பிறகு அங்கமுத்துவின் உதவியால் அநந்தன் அதே ஊரில் உயிர் வாழ்ந்து வந்தான். ஏராளமான பொன்னும் பொருளையும் சந்தர்ப்பம் கிடைத்த அநந்தனை சந்திக்கும்பொழு

MINSARA RASAM
மின்சார ரசம்
வேது அருமையான போக்ஷிகம்.
நிகரற்ற தேக வலிமை -
புதிய ரத்தோட்டம் -
அபாரமான ஜீவசக்தி -
ஆனந்தமயமான வாழ்வு -
இவைகளை யடைய
ஓரே முறை பரிக்ஷியுங்கள்
எல்லா இடங்களிலும் கிடைக்கும்
புட்டி 1-க்கு ரூ. 2.
மின்சார ரசம் கம்பெனி (லிட்) சேலம்.
MINSARA RASAM

தெல்லாம் அங்கமுத்து கொடுத்து வந்தாள்.

அங்கமுத்துவுக்கும் அவள் தகப்பனுக்கும் நடந்த விவாதத்திலிருந்து, அங்கமுத்துவை மகளென்றும் பாராமல் வெறுத்து வந்தார் அவர். அது நாளேறவுற திராப்பகையில் முடிந்தது. தந்தைக்கும் மகளுக்கும் இடையிலிருந்த பகமையை பரம்பரம் தீர்த்து வைக்க எவ்வளவு முயன்றும் பெற்ற தாயால் முடியவில்லை. அங்கமுத்து பூப்பெய்தி விட்டதால் பள்ளிக்குச் செல்வதை நிறுத்திவிட்டாள். ஆனுலும் அறிவு பெருக்கத்திற்கான பல ஆங்கில நூற்களைப் பயிலலானுள் அங்கமுத்து. அது கால அவள் தந்தையார் மணஞ் செய்விக்கக் கருதி, அங்கமுத்துவின் கருத்தை அறியாமலே மணமகனுக்கு ஊர் ஊராக அலைந்தார். இது விஷயம் அங்கமுத்து அறிந்ததும், மணஞ் செய்துகொள்ளும் உரிமை தனக்கிருக்க வேண்டுமென்றும், தன் னுரைமைக்குக் கேடு சூழ்கின்ற முறையில் எவர் காரியஞ் செய்தபோதிலும் அதை தன்னுல் சகிக்க முடியாதென்றும் தன் தாயிடத்தில் வேண்டுதலின்றியே கூறிவிட்டாள். அங்கமுத்துவின் முடிவு கேட்ட தந்தை மிகுந்த கோபம் கொண்டவராய் "பார்க்கிறேன் சிறுக்கியின் செருக்கை" என்று உறுமினர் சிவாநந்த முதலியார்.

அவ்வூரை அடுத்துள்ள அடர்த்தியாக மரங்கள் நிறைந்து பல வரிசைகளையுடைய மாந்தோப்பு பகலிலேயே ஒரே மை இருட்டாக இருக்குமெனில் இரவில் சொல்லவே வேண்டியதில்லை. அந்த தோப்பு சிவானந்த முதலியாருக்குச் சொந்தம். அவரல்லவா அந்த ஊர் ஜமீன்தார்? அந்த பயங்கரமான தோப்பில் ஒரு நாள் நள்ளிரவில் ஒரு பருத்த மரத்தடியில் ஒரு வாலிபனைப் பலமாகக் கயிறு கொண்டு பிணித்துவைத்திருக்கிறார்கள். நான்கைந்து பேர் கையில் குறுந் தடிகளுடன் அவன் அருகில் நின்று கொண்டு "உண்மையைச் சொல்லுகிருயா? மரணத்தை விரும்புகிருயா?" என்று இரைந்த வண்ணம் இருக்கிறார்கள். அவர்கள் யாரென்பதை இதற்குள் வாசகர்கள் அறிந்து கொண்டிருக்கலாம். ஆம்! மரத்தில் கட்டுண்டிருப்பவன்தான் அநந்தன். சிவானந்த முதலியார் வீட்டில் ஓர் காலத்தில் வேலைக்காரனுக இருந்தவன்; அங்கமுத்துவின் எண்ணத்தில் மாற்றத்தை உண்டாக்கியவன். தடியேந்திய கைகளுடன் அவனை மிரட்டிய வண்ணம் இருப்பவர்கள் சிவாநந்த முதலியாரும், அவர் ஆட்களுந்தான்.

அவர்கள் கேட்ட கேள்விகளுக்குப் பதிலாக ஈனக் குரலில் "ஐயா! என்னை அடியாதேயுங்கள். எனக்கொன்றுந் தெரியாது. அங்கமுத்து தானுகச் சென்ருளோ அல்லது எவரேனும் பலவந்தமாக இட்டுச் சென்ருர்களோ நான் அறியேன். என்னை விட்டுவிடுங்கள்!" என்று சொல்லி கெஞ்சினுன்.

ஏழை அழுதகுரல் காதில் விழுமா? என்ன இருந்தாலும் சிவாநந்த முதலியார் பணபலமும் ஆள்பலமும் உடையவரல்லவா? பணம் பாதாளம் வரையில் பாயும் அன்ருே? ஏழை அநந்தன் சொற்கள் அவர் உள்ளத்தைக் கவரவில்லை. பெற்ற பெண்ணை இழந்து பாதவிக்கும் தந்தையிடம் எவ்வாறு ஒருவர் அறிவை எதிர்பார்க்க முடியும். உடும்புப் பிடியாகத் தாங்கள் கொண்ட எண்ணத்தை முடித்துவிடக் கருதி "திருட்டுப் பயலே உண்மையைச் சொல் அல்லது உயிரை விடு" என்று சொல்லிய வண்ணம் குறுந் தடிகளால் அநந்தனின் தலைமேல் தாக்கினுர்கள். அவ்வளவு தான். "ஐயோ! ஐயோ!" என்று கூறிய வண்ணம் பேச்சு மூச்சொழிந்தான் அநந்தன். தங்கள் கருத்து முடிவெய்தி விட்டதைக் கண்ட சிவானந்த முதலியாரும் அவர் ஆட்களும் அவ்விடத்தைவிட்டு அகன்றனர்.

சம்பவம் நடந்து நான் இரண்டு ஆயிற்று. தற்செயலாக தோப்பின் வழிவந்த ஒருவனுல் மூர்ச்சையுற்று கட்டுண்டு கிடந்த அனந்தன் கட்டவிழ்க்கப்பட்டு விடுதலை செய்யப்பட்டான். அனந்தன் அப்பரோபகார வழிப்போக்கனையும் உடன் இட்டுக் கொண்டு ஊரடைந்தான். காணுமற்போன சிவாநந்த முதலியாரின் குமாரத்தியான அங்கமுத்துவின் பண உதவியால் வாங்கப்பட்ட அநந்தனின் சொந்த வீட்டில் அவ்விருவரும் இருந்து வந்தார்கள். அங்கு அநந்தனுக்குத் தகுதியான சிகிச்சைகள் தருந்தவர்களால் செய்யப்பட்டன. இப்படியே சிலநாள் கழிந்தது.

அங்கமுத்து காணுமற் போனதே ஊரெங்கும் பேச்சாக இருந்தது. முதலியார் பல இடங்களில் தேடியும் அங்கமுத்துவின் சேதியை அறிந்து கொண்டாரில்லை. முதலியார்க் குடும்பத்தைப் போலவே அநந்தனும் அங்கமுத்துவை சதா காலமும் எண்ணி எண்ணி நெஞ்சம் புண்ணுனுன்; உள முடைந்தான். என்ன செய்வதென்றும், எவ்வாறு அவளை எய்துவதென்றும் வகையறியாது மனங் குமுறினுன். அன்றிரவு தன்னை மரத்தில் கட்டி தடி கொண்டு தாக்கிய வேதனையைக் காட்டிலும், அங்கமுத்துவின் பிரிவைப் பொறுத்திருப்பது அநந்தனுல் ஆகக் கூடிய காரியமாக இல்லை. அந்த அடிகளால் உண்டான கண்ணுக்குத்






தெரியும் புண்களைக் கூட அவனுல் சகித்துக் கொள்ள முடிகிறது. ஆனுல் அங்கமுத்துவின் மறைவால் தன் நெஞ்சில் உண்டான கண் கொண்டு காண முடியாத நுண்புண்ணை அவனுல் பொறுத்துக்கொள்ளமுடியவில்லை. ஆம்! எப்படி முடியும்? இவ்வுலகத்தில் இன்பமாகக் காலங் கழிப்பதற்கான சாதனங்கள் அனைத்தும் அங்கமுத்துவாலல்லவா கிடைத்தன? வெறும் வேலைக்கார ஏழை அநந்தனுக்காக தன் வாழ்க்கையையே 'பாழ்' படுத்திக் கொண்ட ஒருவளை எப்படி அநந்தன் உள்ளம் மறக்க முடியும்? எனவே அநந்தனும் அங்கமுத்துவை நினைந்து நினைந்து அநவாதமும் நிலைகலங்குகிறுன். தோப்பிலிருந்து கட்டவிழ்த்து விட்டு கொணர்ந்த அந்த பரோபகாரி எவ்வளவோ ஆறுதல் கூறியும், அநந்தனிடம் அவ்வளவும் செவிடன் காதில் ஊதிய சங்காகவே முடிந்தது. நிற்க,

தன் முடிவிற்கு எதிராக அநந்தன் உயிர் பெற்று ஊர் வந்திருக்கிறுன் என்று அறிந்ததும் சிவானந்த முதலியார் விஸ்வாமித்திரர் போனுர்னர். அதுசமயம், அவர் மகள் மறைந்தது கூட அவருக்கு அவ்வளவு பெரிதாகத் தெரியவில்லை. எந்த வகையிலாவது அநந்தனை தொலைத்து விட வேண்டு மென்று முடிவு செய்து கொண்டார். எந்த காரியத்தைச் செய்கிருேமென்பதை கூட கவனிக்காமல், தன் பெண் அங்கமுத்துவை அநந்தன்தான் பலவந்தமாகக் கடத்திச் சென்று மறைத்து வைத்திருப்பதாக போலீசுக்குத் தகவல் கொடுத்தார். அதற்கான பொய் சாட்சியங்களெல்லாம் தயார் செய்துவிட்டார். போலீசையும் தன்பக்கம் வளைத்துக் கொண்டார். ஏராளமான பணத்தை வாரி இறைத்து 'பெண் வந்தால் அல்லவோ வழக்குத் தோற்கும்? அவள் எங்கிருந்து வரப்போகிறுள்? அநந்தனை ஓர் கை பார்த்து விடுவோம். பணம் இருக்கிறது வாரிவிட; பக்கத்துணையிருக்கிறது போலீசு" என்பது சிவாநந்த முதலியாரின் அசைக்க முடியாத முடிவு.

முதலியாரின் ஆசைப்படி போலீசும் அநந்தனைக் கைது செய்து சிறையில் அடைத்துவிட்டார்கள். அந்திய காலத்தில் துணைவனுக சேர்ந்த அப்பரோபகாரி ஜாமீனில் அநந்தன் விடுபடுவதற்காக எவ்வளவோ முயன்றும் பலன் கிடைக்கவில்லை. சிறையில் அநந்தனுக்கு தைரியம் சொல்லிவிட்டு தேர்ந்த வக்கீல் ஒருவரை வைத்து வழக்கை நடத்த ஆரம்பித்தார் அவர். வழக்கு நடந்துவருகிறது. வாதிதரப்பு சாட்சிகள் எல்லாம் விசாரிக்கப் பட்டாகி விட்டன. ஒன்றைப்போலவே மற்ருேர் சாட்சியும் இருந்தது. எல்லாம் கற்பனை செய்யப்பட்டதுதானே!ஏன் ஒன்றைப் போல இருக்காது? பெண்ணைப் பலவந்தமாகக் கடத்திச் சென்ற பொழுது தங்களில் சிலர் பார்த்ததாகவும் சாட்சிகள் கூறினர்கள்.

பிறகு எதிரியான அநந்தன் சாட்சியம் கொடுத்தான். அநந்தன் தன் சாட்சியத்தில் "நான் நிரபாரதி. அங்கமுத்து மறைந்து விட்டமைக்கு நானும் வருந்துகிறேன். அவளைக்கண்டு பிடிப்பதில் சிவாநந்த முதலியாருக்கு நானும் உதவியாக இருக்கிறேன் என்பதாக சத்தியம் செய்கிறேன். அவளைக்காண எனக்கும் ஆசை இருக்கிறது. வழக்குத் தொடர்ந்த சில நாளைக்குமுன் அங்கமுத்து எழுதினது போன்ற கடிதம் ஒன்று எனக்குக் கிடைத்தது. அதன் படி நான் நள்ளிரவில் ஊரை அடுத்துள்ள சிவாநந்த முதலியாரின் மாந்தோப்புக்குச் சென்றேன். நான் அங்கு அங்கமுத்துவைக் காணுது ஏமாற்றமடைந்ததோடு, தற்செயலாக கொடுந்துன்பத்திற்கும் ஆளானேன். அதுசமயம் சிவாநந்த முதலியாரும், அவருடைய ஆட்களும் என்னை ஒரு பெரிய மரத்தில் கட்டி நையப் புடைத்தார்கள். நான் மூர்ச்சையாகி விடவே நான் இறந்து விட்டதாக எண்ணியோ அல்லது வேறு எக்காரணம் பற்றியோ என்னை அவ்விடத்திலேயே கட்டுடன் விட்டுவிட்டு ஓடிவிட்டார்கள். அன்று என்னை முதலியாருடன் கூடி அடித்தவர்களில் இருவர்கள் இவ்வழக்கில் எனக்கெதிராக சாட்சியம் கொடுத்திருக்கிறுர்கள்.

"மறுநாள் காலை சுமார் பத்து மணி இருக்கும் பொழுது நான் உணர்வு பெற்றேன். அது சமயம் நான் மிகவும் தளர்ந்து போயிருந்தேன். உதவிக்கு மெல்ல அழைத்தேன். ஒருவரும் வரவில்லை. ஆனுல் ஒரு மணி நேரங்கழித்து தற்செயலாக அவ்வழியே ஒருவர் வந்தார். நான் கட்டுண்டிருப்பதைக் கண்டதும், ஏழை மீது பரிதாபங்கொண்டு கிலைகுலைந்து என் கட்டுகளை அவிழ்த்து என்னையும் ஊருக்குள் அழைத்து வந்தார். இப்போதும் அவர் என்னுடன்தான் இருந்து வருகிருர். அவரை இதற்கு முன் எனக்குத் தெரியாது. ஆனுல் அவர் முகம் மாத்திரம் இதற்குமுன் எங்கோ பார்த்திருப்பது போல் இருக்கிறது. இருந்தாலும் நிச்சயமாய் சொல்லுவதற்கில்லை.

"அங்கமுத்துவும் நானும் அன்புடன் இருந்தோமென்பதை நான் மறுக்கவில்லை. ஆனுல் நாங்கள் இருவரும் மணஞ்செய்து கொள்ள வேண்டுமென்கிற பேச்சு வார்த்தையே இதுவரையில் எங்களிடை நடைபெற்றதில்லை. தந்தையாரைக் குறித்து அங்கமுத்து என்னிடம் பலமுறை குறை கூறி இருக்கிருள். அவள் மறைந்து விட்டதைப் பற்றி எனக்கொன்றும் முன்னுடியே தெரியாது. மறைந்த நாளுக்கு பத்து தினத்திற்கு முன் தான் நான் அவளைக் கடைசியாக சந்தித்தது. இவ்வளவு தான் என்னுல் இந்த வழக்குப் பற்றிக் கூறக் கூடும். இதைப் பற்றி எனக்குத் தெரிந்ததும் இவ்வளவுதான். நான் நிரபாதி என்பதை மீண்டும் இங்கு தெரிவித்துக் கொள்ள ஆசைப்படுகிறேன்;" என்று சொன்னுன் அநந்தன்.

அன்றே இரு வக்கீல்களின் 'ஆர்கியூமெண்டும்' முடிந்தது. தீர்ப்பு மறு நாளைக்கு ஒத்தி வைக்கப்பட்டது. அன்று கோர்ட்டில் ஏராளமான கூட்டம் நீதிபதி வரவை நோக்கிக் கொண்டிருக்கிருர்கள். அங்கமுத்துவைக் கடத்திச் சென்ற வழக்கில் சம்பந்தப்பட்ட இருதிறத்தினரும் கோர்ட்டில் கூடி இருக்கிருர்கள். சரியான காலத்தில் நீதிபதியும் வந்து தன் ஆசனத்தில் அமர்ந்தார். வழக்கப்படி வழக்கின் விவரத்தை 'ஜூரி'களுக்கு விளக்கிச் சொல்லுவதற்குப் பதிலாக, 'அங்கமுத்தம்மாள்' என்று கூப்பிடுமாறு சேவகனுக்கு உத்தரவிட்டார். சேவகனும் 'அங்கமுத்து' 'அங்கமுத்து' என்று உரத்துக் கூவினுன். அவ்வளவு தான் ஒருவர் சாட்சி கூண்டில்வந்து ஏறிநின்ருர். சிவாநந்த முதலியார் முகத்தில் ஈ விழுந்தால் பொரிந்து போய்விடும்; அவ்விலை அடைந்து

விட்டது அவர் முகம். அங்கமுத்துப் பேரைக் கேட்டதும் அவர் கதியே அப்படியென்றால் சாட்சிகளின் நிலை பற்றி என்ன சொல்ல இருக்கிறது?

சாட்சி கூண்டில் வந்து நின்ற ஆளும், மடமடவென தனது ஆண் உடையைக் களைந்து நின்றார். தலைப் பாகையையும் கையில் எடுத்துக் கொண்டார். அவ்வளவுதான்; கோர்ட்டே அதிர்ந்து போகும் படியாக 'அங்கமுத்து' எனும் குரலும் 'முதலியார் பெண்' எனும் குரலும் கிளம்பிற்று. அவள் நடந்த விஷயங்கள் பூராவையும் விரிவாகச் சொன்னாள். அது சமயம், தன் தந்தையே தன்னைக் கொலை செய்ய சதி செய்தாரென்றும், அதிலிருந்து தப்புவதற்குத்தான் தான் வீட்டைவிட்டு தன்னிச்சையாக வெளிச்சென்றதாகவும், அநந்தனுக்கு அதுபற்றி ஒன்றுந் தெரியாதென்றும், அவரைக் காண்பது தற்செண்ணி அவ்வூர் வந்ததாகவும், தற்செயலாக வழியில் தோப்பில் அநந்தன் கட்டுண்டு கிடந்ததைத் தான் கண்டதாகவும் கூறினாள் அங்கமுத்து. மேலும் அவள், நிஜ ருபத்தில் சென்றால் ஊரார் கண்டு கேலி செய்வார்களென்று எண்ணியும், தகப்பனார் தொந்தரவு கொடுப்பார் என்று கருதியுமே ஆண் வேடத்தில் வந்ததாகவும் குறிப்பிட்டாள்.

முடிவாக நீதிபதி வழக்கைத்தள்ளி விட்டு, பொய் வழக்கு செய்த குற்றத்திற்காகவும், பொய் சாட்சி சொன்னதற்காகவும் சிவாநந்த முதலியாருக்கும், அவர் சாட்சிகளுக்கும் தலைக்கு மூன்று வருடக் கடினகாவல் தண்டனை விதித்தார். அங்கமுத்தைக் கொல்ல முயன்றார் என்பதற்கும், அநந்தனைக்கட்டி அடித்தார் என்பதற்கும் போதிய சாட்சியம் இல்லாததால் அவ்விஷயத்தைப் புறக்கணித்து விட்டார். போலீசையும் நீதிபதி கண்டித்து எச்சரித்ததாக அவ்வூரில் பெரும் வதந்தியாக இருந்து வருகிறது.

அநந்தனும் — அங்கமுத்துவும் மணஞ்செய்து கொண்டார்களாம். அவள் சகோதரன் சேகரன், அவர்கள் இருவரையும் வீட்டுக் கழைத்துச் சென்று சகோதரி மனங்கோணமல் நடந்து கொள்ளுகிறனம்.

---

# பட்டினிப் பட்டாளத்தின் எஞ்சிய சரித்திரம்

## சட்டசபை பிரவேசம் நடக்கவில்லை

### ஊருக்குப் புறப்பட்டது

வியாழக்கிழமை யன்று ஆகஸ்ட் 27-ந் தேதி சென்னை சட்டசபை கூடியபோது அங்குசென்று தங்கள் மனுவை சமர்ப்பிக்கப் பட்டினிப் பட்டாளம் முயன்றது; முடியவில்லை. அதுபற்றி அன்று மாலை ராயபுரத்தில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் ஜதா தலைவர் திரு. கோபாலன் கூறியதாவது,—

நாங்கள் காங்கிரஸ் மண்டபத்தை விட்டு சட்டசபைக்குப் புறப்பட்டபோது போலீசார் எங்களைச் சூழ்ந்து கொண்டனர். சில தெருக்கள் வழியாகப் போகவிடாது நீண்ட தூரம் நடக்க வைத்தனர். போலீசார் கூறியபடி நடந்து கோட்டைக்குச் சமீபம் லெவல்கிராசங்கை அடைந்ததும் அப்பால் போகவிடவில்லை. நாங்கள் திரும்பினோம். வழியில் எங்கும் இளைப்பாறவிடவில்லை. லோன்ஸ்குயரில் ஒரு கூட்டம் கூட விரும்பினோம்; அதையும் தடைசெய்து விட்டனர். போலீசார் அமைதியான எங்களை போகவிடாது தடைசெய்தது அநீதமாகும். அடுத்த வருடம் பெரிய பட்டாளத்துடன் வந்து எங்கள் ஆசையை நிறைவேற்றுவோம்.

### விண்ணப்பம்

பட்டினி பட்டாளத்துடன் விண்ணப்ப மொன்றை திரு. வி. டி. நாராயணன் நம்பியார் எம். எல். சி. சட்ட மெம்பர் திரு. பன்னீர் செல்வத்திடம் சமர்ப்பித்தார். அவர் அதனை நன்கு கவனிப்பதாகக் கூறினர்.

### ஸ்ரீ சத்தியமூர்த்தி

28-ந் தேதி நடந்த ஒரு கூட்டத்தில் திரு. கோபாலன் (தலைவர்) தமிழ் நாட்டு காங்கிரஸ் கமிட்டி தலைவர் திரு. சத்தியமூர்த்தி மீது புகார் கூறினர். திரு. சத்தியமூர்த்தி பட்டினி ஜதா விஷயத்தில் அலட்சிய புத்தியுடனிருந்ததாகவும், சில எற்பாடுகள் செய்வது சம்பந்தமாக திரு. கோபாலன் அவரை பார்க்கப் போனபோது 4 நிமிஷந்தான் பேச இடம் கொடுத்தார் என்றும், பட்டாளத்தின் திட்டத்தில் வெறுப்புக் காண்பிப்பதாகவும், தர்மத்திற்கு நகரில் ஒருநாள் சாப்பாட்டுக்கு ஏற்பாடு செய்யலாமென்று சொன்னரென்றும், காங்கிரஸ் கமிட்டியார் சௌகரியம் செய்திருந்தால் எவ்வளவோ வசதி யேற்பட்டிருக்குமென்றும் திரு. கோபாலன் கூறினர்.

வியாழக்கிழமை இரவு மலபார் எக்ஸ்பிரசில் ஜதா கண்ணனூர்ப் புறப்பட்டு விட்டது.

---


## லெக்ஷ்மி இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்.

தலைமை ஆபீஸ்:—லெக்ஷ்மி பில்டிங், லாகூர்.

**1935-36-ம் வருஷ தேர்ச்சி விபரங்கள்**

| | |
|---|---|
| புதிய பாலிசிகள் | 14,00,00,00 |
| மொத்த ஐவேஜிகள் | 8,00,00,00 |
| ஷேர்-ஹோல்டர்களின் பொறுப்பிலுள்ள வசூலிக்கப்படாத மூலதனம் | 90,00,00 |

உங்களுடைய ஆயுளை லெக்ஷ்மியில் இன்றே "இன்ஷ்யூர் செய்து" லெக்ஷ்மி கடாக்ஷத்திற்கு பாத்திரமாகுங்கள்.

N. மீனாக்ஷிசுந்தரம்,
ஆர்கனைஸிங் செகரட்டரி,
லெக்ஷ்மி இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிட்டெட், காரைக்குடி.

G. ரெங்கசாமி,
மானேஜர்,
லெக்ஷ்மி இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிட்டெட், மதராஸ்.




# மந்திரிப் பதவி பிரச்னை

## ஏற்பதால் நன்மையா, கெடுதியா?

திருச்சி நகர ஜில்லா காங்கிரஸ் காரியதரிசி தோழர் A. S. கிருஷ்ணமூர்த்தி பின் வருமாறு எழுதுகிறார்:—

புது அரசியலின் கீழ் சட்டசபைப் பிரவேசம் செய்ய வேண்டும் என்று காங்கிரஸ் மகாசபை ஏகமனதாகத் தீர்மானித்திருக்கின்றது. சட்டசபைப் பிரவேசம் செய்வதில் காங்கிரஸிலேயே எந்தவிதமான அபிப்பிராய பேதங்களும் கிடையாது. ஆனால் சட்டசபைக்குச் சென்ற பிறகு மந்திரிப் பதவிகளை ஏற்றுக்கொள்ளுவது பற்றிப் பலத்த அபிப்பிராய பேதம் நிலவி வருகின்றது. மந்திரிப் பதவி வகிக்கலாமா? கூடாதா? என்பதைப்பற்றி முடிவு செய்வதற்கு முன், நமது தாய்ச்சபையாகிய காங்கிரஸின் லக்ஷியத்தையும், புது அரசியலைப்பற்றி அது நிறைவேற்றி யிருக்கும் தீர்மானத்தையும் நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். இதை முன்னால் வைத்துக் கொண்டு மந்திரிப்பதவிப் பிரச்னையை ஆலோசிக்க வேண்டும்.

நமது லக்ஷியமோ பரிபூர்ண விடுதலை. தற்சமயம் நம் மீது நமது விருப்பத்திற்கு மாறாகவும், சம்மதமின்றியும், பலவந்தமாகப் புது அரசியல் திட்டம் ஒன்று சுமத்தப்படுகின்றது. இத்திட்டம் தற்சமயமுள்ள அரசியல் சுதந்திரங்களையும் பிடுங்கிக்கொள்ளுவதுடன், மிகவும் பிற்போக்கானதாகவும், நமது அடிமை சாஸனத்தை நிரந்தரமாக்கக் கூடியதாகவும் இருக்கின்றது. இது நம்மை நமது லக்ஷியத்தினின்று வெகு தூரம் தள்ளிக்கொண்டு செல்வதாக விருக்கிறது. இதனால்தான் காங்கிரஸ் புது அரசியலை ஏற்க மறுப்பதுடன், அத்திட்டத்தை உடைத்தெறிய வேண்டுமென்றும் தீர்மானித்திருக்கிறது.

### நமது லக்ஷியம்

நமது லக்ஷியமான பூரண விடுதலை எவ்வகையில் கிடைக்கும் என்று சற்று யோசிப்போம். நமது தேசத்தின் விடுதலை, நீண்ட அறிக்கைகளினாலும், சாமர்த்தியமான வாதங்களாலும், வீண் ஆரவாரத்தினாலும் கிட்டாது. 1000 கணக்கில் சிறை செல்லுவதினால் மாத்திரம் சர்க்காரின் மனப்பான்மை மாறாது. பின் என் செய்ய வேண்டும்? பொது ஜனங்களின் மனதில் விடுதலை உணர்ச்சி பொங்கி எழவேண்டும். "நம் நாடு விடுதலையடைந்த பின்தான் ஓய்வு" எனும் மனோதைரியம் ஏற்பட வேண்டும். பொது ஜனங்களிடமுள்ள இம்மனோ எழுச்சியை சர்க்கார் அறிந்து கொள்ளச் செய்யவேண்டும். சர்க்கார் அறிந்தார்களானால் அல்லது பொது ஜனக் கிளர்ச்சி நம் சக்திக்கும் மேம்பட்டது என்று கருதினால்தான் பொது ஜனங்களின் அபிலாஷைக்கு சர்க்கார் செவி சாய்ப்பார்கள். அப்போதுதான் காங்கிரஸ் தன் லக்ஷியத்தைச் சமீபிக்கும். ஆகவே அதற்காக வேலை செய்ய வேண்டியது காங்கிரஸ் காரர்களின் கடமையாகும்.

### சட்டசபைப் பிரவேசம்

புது அரசியலை நிராகரிக்க வேண்டுமென்று காங்கிரஸ் தீர்மானித்திருக்கிறது. அதை அமுலுக்குக் கொண்டு வரவேண்டும். புது அரசியலை தகர்க்க சட்டசபைகளுக்குச் செல்ல வேண்டுமென காங்கிரஸ் கருதியது. ஆகவே அது தனது பிரதிநிதிகளை அனுப்ப போகின்றது. அவர்கள் செல்லுவதற்கு மற்றொரு காரணம் பிற்போக்காளர்கள் அங்கு சென்று தேச முன்னேற்றத்திற்குத் தடை செய்யாமலிருக்கவும்தான்.

சட்டசபைக்குச் செல்லுவதினால் புது அரசியலைத் தகர்க்க முடியுமா என்றால் முடியாது என்று சொல்லலாம். காங்கிரஸ் பிரதிநிதிகளே 100-க்கு 100 இருந்தாலும் எவ்விதப் பயனுமில்லை. அவர்களைக்கண்டு சர்க்கார் பயப்படவு மாட்டார்கள். சர்க்கார் இவர்களைக்கண்டு பயப்பட வேண்டுமானால், பொதுஜனக்கிளர்ச்சி காங்கிரஸிற்குச் சாதகமாகயிருக்க வேண்டும். ஆகவே காங்கிரஸ் எதற்காகச் சட்டசபைகளுக்குச் செல்லுகிறதென்றால் பொதுஜனக்கிளர்ச்சி உண்டாக்குவதற்கும் அதன் மூலம் புது அரசியலைத்தகர்க்கவும் என்று சொல்லலாம். ஆகவே காங்கிரஸ் பிரதிநிதிகள் சட்டசபைகளுக்குச் சென்று புது அரசியலின் தன்மையையும், சர்க்காரின் அடக்குமுறை, ஏகாதிபத்ய ஆசையையும், மக்களின் சீர்கேடான வாழ்க்கையின் நிலைமையையும், தேசத்தின் அந்தஸ்தையும் பொது ஜனங்கள் நன்கு தெரிந்து கொள்ளும்படி செய்ய வேண்டும். அதாவது சட்டசபைகளைப் பிரசாரச் சாதனங்களாக உபயோகித்துக் கொள்ள வேண்டும். அதன் மூலம் விடுதலை வெறி உண்டாக்க வேண்டும். பொதுஜனக்கிளர்ச்சி பெருக பெருக நாம் லக்ஷியத்தை நெருங்குவோம்.

### அரசியல் மோசடி

புது அரசியலின் கீழ் மந்திரிப்பதவி முடிவு கூறுமுன் மந்திரிகளுக்குள்ள அதிகாரம் யாது என்பதையும், என்ன செய்ய முடியுமென்பதையும், தெரிந்து கொள்ள வேண்டும்.

சர்க்காருக்கு வேண்டிய குண்டுசிகளுக்கு டெண்டரை அழைத்தால் இந்திய கம்பெனி குறைவாகவும், பிரிட்டிஷ் கம்பெனி சிறிது அதிகமாகவும் கேட்பதாக வைத்துக் கொள்ளுங்கள். மந்திரிகள் இந்திய கம்பெனிக்குக் கொடுத்தாலும் அதை ரத்து செய்து பிரிட்டிஷ் கம்பெனிக்குக் கொடுக்க கவர்னர்களுக்கு அதிகாரமிருக்கிறது. ஆகவே மந்திரிகளுக்கு எந்த விதமான பிரயோஜனமான அதிகாரமும் கிடையாதெனலாம்.

மந்திரிகள் யாவரும் அதிகாரமில்லாதவர்கள். பொக்கிஷ மந்திரிக்கு, நிதி விஷயத்திலும், ராணுவ மந்திரிக்கு ராணுவ விஷயத்திலுமே அதிகாரம் இல்லையென்றால் அரசியலின் தன்மை நன்றாய் விளங்கும்.

### மந்திரிப் பதவி

புதிய அரசியலில் இரண்டு சட்டசபைகள். கீழ் சபையில் காங்கிரஸ் மெஜாரிடியாக வந்தாலும் மேல் சபையில், ராஜாக்களும் ஜெமீந்தார்

களுமே நிறைந்திருப்பர். இங்கிலை மையில் கீழ் சபையில் நிறைவேறும் தீர்மானம் மேல் சபையில் என்ன வாகும் என்று சொல்ல வேண்டிய தில்லை.

ஆகவே சட்ட சபைகள் மூலம் ஜனங்களுக்கு எவ்வித நன்மையுமில்லை. இதில் மந்திரிப்பதவி வகித்தாலோ நாட்டிலேற்படும் மாறுதல்களுக் கெல்லாம் மந்திரிகளே பொறுப்பாளிகளாவர்கள்? ஏன் எனில் மந்திரிகளுக்கு அதிகாரமில்லை யென்றாலும் பொறுப்பு அவர்களைச் சார்ந்ததாகும். இதனால் காங்கிரஸ் மீது நம்பிக்கைக் குறைவு ஏற்படும் "குளிக்கப் போய்ச் சேற்றை பூசிக் கொள்வது போல்" புது அரசியலை தகர்க்கப் போய், அதை தகர்க்காமல் நமது லக்ஷியத்திற்கு வெகு தூரம் தள்ளப்பட்டிருப்போம். ஆகவே பதவி ஏற்பது ஆபத்தையே உண்டாக்கும்.

---

சந்திரனிடமிருந்து நமக்கு வெளிச்சம் வர $1\frac{1}{4}$ விநடி ஆகிறது.

## சிவகெங்கை தாலுகா 2வது அரசியல் மகாநாடு

---

சிவகங்கைத் தாலுகா இரண்டாவது அரசியல் மகாநாடும் முதலாவது விவசாயிகள் மகாநாடும் 6—9—36 ஞாயிற்றுக்கிழமை ஏரியூரில் நடைபெறும்.

அரசியல் மகாநாடுக்கு தேசியக் கொடி ஏற்றுபவர்: கல்லிடைக்குறிச்சி ஸ்ரீமதி லட்சுமி அம்மாள் அவர்கள்.

திறப்பாளர்: வேலூர் ஸ்ரீமான் A. குப்புசாமி முதலியார் அவர்கள்.

தலைவர்: தூத்துக்குடி ஸ்ரீமான் A. மாசிலாமணிப் பிள்ளை அவர்கள்.

விவசாயிகள் மகாநாட்டின் திறப்பாளர்: சென்னை தாருல் இஸ்லாம் ஆசிரியர் அல்ஹாஜ் பா. தாவுத்ஷா அவர்கள்.

தலைவர்: மட்டப்பாறை ஸ்ரீமான் P. S. வெங்கிட்டராமையர் அவர்கள்,

ஜவஹர் படத் திறப்பாளர்: நாகை ஸ்ரீமான் R. M. கோவிந்தசாமி செட்டியாரவர்கள்.

திருவண்ணாமலை ஸ்ரீமான் N. அண்ணாமலைப் பிள்ளை முதலிய பல தேசியத் தலைவர்கள் விஜயம் செய்வார்கள். என்று காரியதரிசி திரு. வேலாயுதம் செட்டியார் அறிவிக்கிறார்.

---

## பாகநேரி கிராம முன்னேற்ற சங்கம்

23—5—36உ மாலை 5-க்கு கிராம முன்னேற்ற சங்க பிரசாரக் கமிட்டியார் இவ்வூருக்கு விஜயம் செய்தார்கள். இவ்வூர் விவசாயத் தலைவர் சுப. பெரி. அழகர்சாமி தேவர் அவர்கள் தலைமையில் ஓர் கூட்டம் நடைபெற்றது. அவ்வமயம் பாகநேரி மு. கருப்பயா, K.R. சந்திரன் கடவுள் வாழ்த்து பாடியபின் G. வெங்கிட்டராமய்யாவர்கள், எஸ். காளிதாஸ் அவர்கள், சங்கத் தலைவர் சித. கண்ணப்பன் அவர்கள், டி. எஸ். மீனாக்ஷிசுந்தரம் அவர்கள் முறையே 'கிராம முன்னேற்றம்', 'விவசாயம்', 'சுகாதாரம்', 'கள்குடி' என்பது பற்றி மிக விரிவாகவும் அழகாகவும் சொற்பொழிவாற்றினார்கள்.


தயாராகிவிட்டது! ஆரம்ப தேதியை எதிர்பாருங்கள்!

ஸ்ரீமத் மகாபாரதத்தின் ருசிகரமான ஓர் பாகம்

# இந்திர சபா

(தமிழ் பேசும் படம்)

T. K. சுந்தரப்பா, சாந்தாதேவி, சுசீலாதேவி

மற்றும் பிரபல நடிகர்களைக்கொண்டு நடிக்கப்பெற்றது

சென்னை சௌண்ட் ஸிடியில் தயாரித்தது.

பூரா உரிமை பெற்றவர்கள்:—

A. M. கம்பெனி 2/5, வான்னல்ஸ் ரோட் (opp. to Egmore Railway Station)

எழும்பூர், :: :: சென்னை.




சினிமா விமர்சனம்

# 'சம்சார நௌகா'

(ஆர். சாமிநாதன்)

நீண்ட காலமாக தமிழ் மக்கள் எதிர்பார்த்திருந்த 'சம்சார நௌகா' என்ற கன்னடப் படம் வெளியாகி விட்டது. சென்ற ஞாயிறன்று சென்னை பிராட்வே டாக்கீஸில் 'முற்காட்சி' யொன்று நடந்தது. அதற்கு ஜஸ்டிஸ் லக்ஷ்மண ராவ் தலைமை வகித்துப் பேசினார். ஏராளமான சினிமாப் பிரியர்களும், நடிகர்களும், நடிகர்களாகப் போகிறவர்களும், பத்திரிகைக்காரர்களும், சம்சார-நௌகாவிலேயே நடித்த பலரும் வந்திருந்தார்கள்.

இப்படத்தை வெளியிடும் கம்பெனி —தேவி பிலிம்ஸ்.

படமெடுத்த ஸ்டூடியோ—வேல் பிக்சர்ஸ்.

டயாக்டர்கள்—திரு. K. நஞ்சப்ப செட்டியார், B.A., B.L., H. L. N. சிம்ஹா.

நடிகர்கள்.

திரு. B. R. பந்துலு,
„ M. S. மாதவ ராவ்,
„ M. மாதவ ராவ்,
„ G. T. பாலகிருஷ்ண ராவ்,
„ H. N. ராமகிருஷ்ண பட்
மிஸ். M. V. ராஜம்மா,
„ S. K. பத்மா,
„ V. சரோஜம்மா.

நாடகப் புகழ்

இவர்களே தமிழ் நாட்டில் பலர் அறிவர். சம்சார நௌகா என்ற கதையை நாடகமாக வெகு நாளாய் நடாத்தி வருகிறார்கள். அதனைப் பார்த்துப் புகழாதார் இல்லை. அப்புகழ்ச்சி சினிமாவில் பூர்த்தியடைகிறது.

சம்சார நௌகாவின் சினிமா உருவம் எத்தனையோ வகையில் மேம்பட்டிருக்கிறது. தமிழ்ப் படங்கள் இவ்வாறு உயர்ந்து வருவது எக்காலம் என்று வயிறெரியாமலிருக்க முடியவில்லை. நமது சகோதரர்களாகிய கன்னடரும் தெலுங்கரும் நமக்குப்பால் ஆரம்பித்தாலும் சினிமாக் கலையில் எவ்வளவு முன்னேறி யிருக்கின்றனர்! தமிழர்கள் மிக தமிழர்களாகவன்றோ இருக்கிறோம்?

சம்சார நௌகாவில் போட்டோகிராபி, ஒலிப்பதிவு, செட்டிங்ஸ் எல்லாம் செம்மையாய் அமைந்திருக்கின்றன.

சுருக்கமாக வேல் பிச்சர்ஸ் மீண்டுமொருமுறை தம் பெயரை நிலைநாட்டிக் கொண்டுவிட்டது.

திரு. பந்துலு

நடிகர்களைப் பொறுத்த வரையில் யார் யாரைவிட நன்றாக நடிக்கின்றார்கள் என்பதையே சொல்ல முடியாது. அனைவரும் தத்தம் பகுதியை மிகச்சிறப்பாக கையாளுகின்றார்கள். கதாநாயகனாக (சுந்தரனாக) நடிக்கும் திரு. B. R. பந்துலு கடவுளிடம் ஆங்கிலத்தில் வாதஞ் செய்யாமலிருந்திருந்தால் நலமாயிருக்கும். அவர் பேச்சு ஏதோ பழக்கமில்லாதவர் ஆங்கிலம் பேசுவதுபோல் தோற்றுகிறது; இரண்டாவதாக அந்த இடத்தில் மட்டிலும் ஆங்கிலம் பேசவேண்டிய அவசியமென்ன வேற்பட்டதென்றும் புரியவில்லை. ஒருநாள் நண்பனொருவன் ஆங்கிலத்தில் பேசி முடித்ததும் அதனை தொடர்ந்துவிட்டாரென்றால் முதலில் நண்பன் ஆங்கிலம் பேசிய



சம்சார நௌகாவில் கிரிஜாவிடம் ஆச்சார் காட்டும் காதல்.

போதெல்லாம் அவர் கன்னடம் தனே பேசுகிருர்? இது எப்படிப் போனாலும் ஒருவன் தன்னை மறந்து, துக்கம் மிகுந்து கடவுளை நிந்திக்கும் போது தாய்மொழியை விட்டு நிச்சய மாகவும் ஆங்கிலத்தில் பேசமாட்டான்; பேசவும் முடியாது.

திரு. பந்துலு எல்லா ரசங்களிலும் நன்ருக நடிக்கிருர். காதல் சீன்கள் புனிதமாகவும் பார்ப்போர் இருத யத்தை அள்ளும்படியாகவு மிருக்கின் றன. அதன் பெருமை திரு. பந்துலு வைச் சேர்ந்ததா, அல்லது காதலியாக நடிக்கும் M. V. சரோஜம்மாவைச் சேர்ந்ததா என்று வரையறுத்துக் கூறமுடியாது.

மிஸ் ராஜம்மா

ஸ்ரீமதி ராஜம்மாவை, a 'lovely bird, born aristocrat' என தேவி பிலிம்காரர்கள் குறிப்பிட்டிருக்கிருர்கள். முற்றிலும் உண்மை. அபார சௌந்தரிய முடையவரென்றெனினும் 'அழகிய புள்' போன்ற பெருங் குடிப்பிறப்பும், உயர்ந்த ஒழுக்கமும், புருஷ 'பக்தியும்' நிரம்பிய ஒரு நல்ல காதலிபோல் காணப்படுகிருர். இவர் நடிப்பு மிகவும் அருமை. விசேஷமாக காதல் காட்சி கள் குறிப்பிடத்தகுந்தவை.

மிஸ் பத்மா

இவர், சுந்தரத்தின்மீது மனதைச் செலுத்தி, தம் வாழ்க்கைச் சுந்தரத்தை சுதந்திரத்துடன் இழந்து, மனதிற் கொவ்வா மாதவுக்கு மனைவியாகி வாடி வதங்கும் சுசீலாவாக நடிக்கிருர். இவர் தம் பெயருக்கேற்ப உத்தமமான சில முடையவராகத் தோற்றுகிருர். சம்சார ஜௌகாவைப் பார்ப்பவர்கள் இதனை பத்மாவே தலைசிறந்த நடிகையென்று கூறிவிடலாம். அப்படி கூறினுல் தவ றில்லை. பல விடங்களில் அவர் பேச் சும் நடிப்பும் பார்ப்பவர் மனதைக் கொள்ளை கொள்கின்றன.

ராமகிருஷ்ணபட்

திரு. H. W. ராமகிருஷ்ணபட் என் பவர் தொட்டம்மாவாக நடிக்கிருர். இவர் ஓர் ஆடவர் என்று சொன்னு லன்றி சினிமாப் பார்த்தவர்கட்குத் தெரியாது. அவ்வளவு ரசமாக தம் நடிப்பில் நடந்துகொள்கிருர். பாட்டி மார்களின் பேச்சு, இழுப்பு, வழக்கங் கள் முதலியவற்றில் முதல் 'நிம்பர்' நடிகர் என்னலாம். இவரது நடிப்பின் ஒவ்வொரு பகுதியையும் புகழாமலிருக்க முடியாது.

இங்ஙனமே கூறினுல் ஒவ்வொரு நடிகரையும் புகழ்ந்தாக வேண்டும். பொதுவாக அனைவரும் நன்கு நடிக் கின்றவர்கள் என்றுமட்டிலும் சொன் னுல் அமையும். இவர்கள் எல்லோ ரும் சினிமா புகுந்த முதல் தடவை இதுதான் என்று சொல்லப் படுகிறது. அது உண்மையானுல் நம் பாராட்டு இன்னும் பலபட உயர்வுதற்கு காரணமில்லாமலில்லை.

கடைசியாக ஒரு வார்த்தை. கமது தண்டபாணி தேசிகரின் சங்கீதம் முதலில் இணைக்கப்பட்டிருக்கிறது. எனவே பட்டணத்தாரை சிந்தையில் கொண்டு சம்சார சாகரத்தின் இன்ப துன்பங்களை படத்தில் பார்க்கலாம்.

தமிழ் நடிகர்கள் சம்சார நௌகா வைப் பார்த்தின்புறுவதுடன் தங்கள் படத் தொழில் எப்படிப் போகிற தென்பதை சற்று நினைத்துப் பார்க்க வேண்டும்.

---

## நார்வேயில் டிராட்ஸ்கி கைது

ருஷ்யா தலைவர்கள் சிலருடன் அபிப்பிராய வித்தியாசம் கொண்டு வெளியேறி நார்வேயில் தங்கி வரும் டிராட்ஸ்கி என்ற பொது வுடமை வீரரும் அவரது புதல்வனும் (ருஷ்ய அதிகாரிகள் சிலரைக் கொலை செய்வதற்காக) ஜர்மன் கிளர்ச்சிக் காரர்கள் செய்த சதியில் சம்பந்தப்பட் டிருப்பதாகக் கருதி ருஷ்ய சர்க்கார் சொன்ன தீர்ப்பை போன வாரம் நேயர்கள் பார்த்திருப்பார்கள். இந்த வாரம், டிராட்ஸ்கியையும் அவரது மனை வியையும் இருக்குமிடத்தை விட்டு வெளிச் செல்லக் கூடாதென்று நார்வே சர்க்கார் தடையுத்தரவு போட்டு கைது செய்திருப்பதாகச் செய்தி கிடைக் கிறது. டிராட்ஸ்கியின் இரு காரிய தரிசிகள் நார்வேயிலிருந்து வெளி யேற்றப்பட்டு விட்டார்கள். சர்க்கார் விதித்த சில நிபந்தனைகட்கு டிராட்ஸ்கி உள்படாததே அவர் கைதி செய்யப் பட்டதற்குக் காரணமென்று சொல்லப் படுகிறது.

# சினிமா உலகம்

## ரமனிக்லால் மோஹன்லால்

இவர்களது அடுத்த படம் டேஞ்சர் சிக்னல். இதற்காக டைரக்டர் திரு வேதி சென்னையில் சில காக்ஷிகளை எடுக்கிருர். இதில் மிஸ். கே. டி. ருக் மணி நடிப்பதாகத் தெரிகிறது.

## ஸௌண்ட் சிடி

இதில் ஸ்ரீ ஆர். பிரகாஷ் டைரக்ட் செய்துவரும் இந்திர சபா என்ற தமிழ் பேசும் படத்தின் பிரசார உரிமைகளை பெல்ஸ்ஸ் ஏ. எம். கம்பெனியார் வாங்கியிருக்கிருர்கள். இதில் மிஸ். சாந்தா தேவி, டி. கே. சுந்தரப்பா நடிக் கிருர்கள். மீராபாய் என்ற தமிழ் பேசும் படமும் இங்கு தயாராகி வரு கிறது. இதில் ராஜசுந்தரிபாய் நடிக் கிருர். ஏ. நாராயணன் டைரக்ட் செய்கிருர்.

## நாஷனல் மூவிடோன்

செல்லூர் ஸ்ரீராம் டாக்கீஸாரின் தெலுங்கு ஸதி துளசி படம் எடுக்கப் பட்டு முடிந்துவிட்டது. பார்வதி கல் யாணம் எடிட்டிங் முடியப் போகிறது. சீமந்தனி எல்லா ஊர்களிலும் காட்டப் படுகிறது. இவர்கள் அடுத்தபடியாக ஓர் சமூகத் தமிழ் படமும் மோஹினி ருக்மாங்கதா என்ற படத்தை தெலுங்கிலும் எடுப்பார்கள். ஓரியண் டல் பிலிம்ஸார் சேதுபந்தனம் என்ற தமிழ் பேசும் படத்தை இங்கு எடுக் கிருர்கள்.

## இந்திர சபா

ஸ்ரீநிவாஸ் ஸினிடோனுக்கு சொந்த மான 'இந்திர சபா' படம் தயாராகி விட்டது. சென்ஸார் ஸர்டிபிகேட் டைப் பெற்றதும் பொது ஜனங்கட்கு காண்பிக்கப்படும். இதன் ஒலிப்பதிவு இஞ்ஜினீயராக இருந்தவர் ஸ்ரீமதி நாரா யணன்; டயரக்டராக இருப்பவர் திரு. பிரகாஷ். மிகுந்த கவனமெடுத்து படம் செம்மைப்படுத்தப்பட்டுள்ளது. திரு. டி. கே. சுந்தரப்பா சந்தனுவாக நடிக் கிருர். மிஸ். சாந்தா தேவியின் நட



னம் சேர்க்கப்பட்டுள்ளது. திருவா ளர்கள் ஏ. எம். கோ, டிஸ்ட்ரிபூட் டேர்ஸ், வானெல்ஸ் ரோட், எழும்பூர், என்ற விலாசத்திற் கெழுது வோருக்கு படத்தை இப்பொழுதே 'புக்' செய்துகொள்ள முடியும்.

## சூப்பர் டமில் டாக்கீஸ்

தி. சூப்பர் டமில் டாக்கீசார் தயா ரித்துவரும் 'வீர அபிமன்யு' என்ற தமிழ்படம் கல்கத்தா பயனீர் ஸ்டுடி யோவில் தயாராகி முடிந்துவிட்டது. அதில் மிஸ். டி. பி. ராஜலக்ஷ்மி, மகா ராஜபுரம் எம். ஆர். கிருஷ்ணமூர்த்தி ஆகியவர்கள் கதாநாயகராக நடிக் கின்றனர். டி. பி. ராஜலக்ஷ்மியின் சகோதரர் திரு. டி. பி. ராஜகோபாலன் அபிமன்யுவாக நடிக்கின்றுர். யுத்தக் காட்சிகள் ஏராளமான பொருட் செலவில் தயாரிக்கப் பட்டிருக்கிற தாம்.

## விரல் வெந்தது

பம்பாய் டாக்கீஸின் படம் பிடிக்கும் மானேஜரான திரு. ஆச்சரியாவின் கை விரல்கள் 'லெவல்கிராஸிங்' என் னும் படம் பிடிக்கும்போது எரிந்து போயினவாம்.

## சினிமா இல்லாத நாடு

ஐரோப்பாவில் 33 நாடுகள் இருக் கின்றன. அவைகளில் இரண்டு நாடு களில் மட்டிலுந்தான் சினிமா இல்லை.

---

## செப்டம்பர் 1-ந் தேதி

### விவசாயிகள் தீர்மானம்

அகில இந்திய தொழிலாளர் காங் கிரசின் தலைவரான ஸ்ரீ. சிவநாத் பானர்ஜி இந்தியா வெங்கணுமுள்ள விவசாயிகள் செப்டம்பர் 1-ந் தேதியை விவசாயிகள் தினமாகக் கொண்டாட வேண்டுமெனவும், அன்று ஆர்ப்பாட்டங்கள் நடத்தி பொதுக் கூட்டங்கள் கூட்டி, தம் கோரிக்கை களை வெளியிட வேண்டுமென்றும் ஓர் அறிக்கை விடுத்திருக்கிருர்.

## அபிசீனிய யுத்தம்

ஆகஸ்ட் 27-ந் தேதி 1200 அபிசீனி யர்கள் அடிஸ் அபாபாமீது படை யெடுத்து வந்தார்களென்றும், இதாலி யப்படைகளும் சுதேசிப்படைகளும் அவர்களைத் தோற்கடித்து துரத்தி விட்டன வென்றும், ராஸ் அபேறு என்ற அபிசீனிய கவர்னரே தம் முடைய யந்திரப்படையுடன் அபிசீனி யரைத் தோற்கடித்தாரென்றும் இத் தாலியச் செய்தி யொன்று கூறுகிறது.

---

## சென்னை சர்வகலாசாலை பட்டமளிப்பு விழா

ஆகஸ்டு 28-ந் தேதி மாலை சென்னை சர்வகலாசாலையின் பட்டமளிப்பு விழா ஆக்டிங் உபதலைவர் (Vice chanceller) டாக்டர் ஏ. லட்சுமணசாமி முத லியார் தலைமையில் நடைபெற்றது. 514 மாணவர்களில் 321 பேர் நேரே வந்து பட்டம் பெற்றுக் கொண்டனர். அவர்களில் (351-ல் 155 பி. ஏ. 95 எல். டி. 71 எம். ஏ. வாரவர்களில் 32 பி. எல். 110 எல். டி. 51 எம். ஏ.)



நாராயணஐயங்காரின் கோட்டு வாத்திய கோஷ்டி

# சில துணுக்குகள்

2800 வருடங்கட்கு முன்னமேயே இந்தியா நாட்டில் இரணசிகிச்சை செய்யப்பட்டதாம்.

• • •

பிரிட்டனில் 5000 பாடசாலைகளில் ரேடியோ மூலம் பிள்ளைகட்கு பாடம் போதிக்கப்படுகிறது.

• • •

கட்டடங்களில் கை தட்டும் போது எவ்வளவு சத்த முண்டாகிறதென்பதை அளக்க ஒரு புதிய கருவியைக் கண்டு பிடித்திருக்கிறார்கள்.

• • •

'இன்பிரா' சிவப்பு ஒளியின் உதவியால் பெர்லின் நிபுணர் ஒருவர் இருளில் பொருட்களைக்கண்ணால் பார்க்கக்கூடிய மாதிரியில் ஒரு கருவியை கண்டு பிடித்திருக்கிறார்.

• • •

லண்டனிலுள்ள 'இன்பர் மேட்டர்' என்ற ஒரு கருவியின் பொத்தானை அமுக்கினால் அது அங்குள்ள ஓட்டல்கள், விளையாடு மிடங்கள், நாடகமேடைகள் முதலியவற்றைக் கூறுமாம்.

• • •

பஞ்சாப் மாகாணத்தில் 1936 ஜூன் மாதத்தோடு முடிவடைகிற மூன்று மாதங்களில் 15,238 மோட்டார் வண்டிகள் ஓடிக் கொண்டிருந்தன. மூளியிலிருந்து உண்டாகும் மின்சார சக்தியை அளந்து அதன் மூலம் மூளையின் அளவைக்காணும் முறையொன்று கண்டு பிடிக்கப்பட்டுள்ளது.

• • •

தென் ஆப்ரிக்கா காடு ஒன்றில் இலைகளில்லா அடி மரங்கள் பல காணப்படுகின்றன. இவற்றில் உட்பாகம் பாறையாக இருக்கிறது. மேல் பாகம் பட்டை போல் மண்ணால் மூடுண்டிருக்கிறது. இம்மரம் தேக்கு மர இனத்தைச் சேர்ந்தது என்றும், ஒரு காலத்தில் சிக்கிமுக்கிக்கல் திராவக வடிவமாக வெள்ளப் பெருக்கெடுத்த காலத்தில் கல்லாக மாறி விட்டன வென்றும் ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்.

• • •

1934-35ம் வருடத்தில் இந்திய சர்க்கார் கப்பல் வரியால் 54 கோடி ரூபாய் கிடைக்கப் பெற்றனர்.

• • •

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் மணி யொன்றுக்கு 60 மைல் ஓடக்கூடிய 419 ரயில் வண்டித் தொடர்களிருக்கின்றன.

• • •

டாக்டர் ஏ. டி. பிராஸ்காடி என்ற ஒரு அமெரிக்கர் காலிபோர்னிய தேசத்துப் பழங்களிலிருந்து வாசனைத் திரவியங்கள் செய்கிறார்.

• • •

இதாலிக்கும் ஸ்விட்ஜர்லாந்துக்கு மிடையிலுள்ள சிம்ப்ளன் மலைக் குகையே உலகில் நீளமுடையதாம். அதன் நீளம் $12\frac{1}{2}$ மைலாகும்.

• • •

பழங்களின் உட்புறத்தைப் பார்ப்பதற்கு ஒருவித எக்ஸ்ரே கருவியை செய்திருக்கிறார்கள்.

• • •

மோட்டார்கட்கு பெட்ரோலுக்குப் பதில் சாராயத்தை விடும் முறையை அமரிக்காவில் கண்டு பிடித்திருக்கிறார்கள்.

• • •

சுமார் 30 ஆயிரம் அடி உயரத்திலிருந்து 780 சதுர மைல் விஸ்தீர்ண முள்ள இடத்தை படம் பிடிக்கக்கூடிய கருவி யொன்றை சமீபத்தில் கண்டு பிடித்திருக்கிறார்கள்.

• • •

டாக்டர் டபிள்யூ. ஜெ. மாகர்மிக் என்பவர் ஒருவித குழாயைக் கண்டு பிடித்திருக்கிறார். அதில் புகையிலையைப் போட்டால் நெருப்பு வையாமலே புகையை எழுப்பும். நெருப்பைத் தருவது உள்ளே இருக்கும் மின்சாரக் கருவி.

• • •

திரு. என். ஜி. கிட்டப்பா முதலாவது நடித்த நாடகம் நல்லதங்காள். அதில் தங்காளின் புதல்வனாக வேடம் புனைந்தார். மிகச் சிறிய வாலிபனாதலால் தன் பாட்டோடு நல்லதங்காள் பாடவேண்டியதையும் பாடி முடித்து விட்டாராம்.

• • •

## இலங்கை 'காந்தி'

இலங்கையில் ஒரு காந்தி யிருக்கிறார். அவர் பெயர் அலுவிஹாரா. அவர் ஓர் பாரிஸ்டர், வட்டமேஜை மகாநாட்டுக்கு நம் காந்திஜி போயிருந்த போது திரு. அலுவிஹாரா உடனிருந்து நிரம்ப சௌகரியம் செய்து கொடுத்தார். அவருக்கு காந்திஜீ மீதும், காங்கிரஸ் மீதும் எல்லையில்லா அன்பு. அவர் இப்போது இலங்கை சட்டசபையில் உறுப்பினராயிருக்கிறார்.

## ஹரிலால் காந்தி தெய்வீக ஊழியம்

அரிலால் காந்தியாயிருந்து முதலெழுத்தை விடாமலே அப்துல்லா காந்தியாகிவிட்ட 'காந்திஜியின் மூத்த' மகன் பம்பாயிலிருந்து ஜகரியா சையத், மௌலானா குள்ஜந்தி ஆகியவர்களுடன் 28-ந் தேதி பங்களூர் வந்து சேர்ந்தார். கொச்சியில் நடைபெறப்போகும் மலபார் முஸ்லிம் மகாநாட்டில் தலைமை தாங்குவார்; அப்பால் ஹரிஜனர்களை முஸ்லிம்களாக்குவதில் தீவிரமாக ஈடுபடுவார் என்று தெரிகிறது.

## பரமாநந்தர் மன்னிப்புக் கேட்டார்

ஆகஸ்ட் 26-ந் தேதி டில்லி ராணித் தோட்டத்தில் ஆர்யயுவ சங்கச் சார்பில் ஒரு கூட்டம் நடைபெற்றது. அதில் பாய் பரமாநந்தர் பேசினார். பேசியபோது அவர் "எனக்கு காங்கிரஸ் பெண்களை அவமதிக்கவேண்டுமென்ற எண்ணமே கிடையாது. என் வார்த்தைகளை அளவுக்குமிஞ்சி வியாக்யானம் செய்து விட்டனர்" என்றார். இவ்வாறு சொன்னதற்காக அவருக்கு பெண் சத்தியாக்கிரகிகள் சார்பாக வந்தனம் கூறுவதாய் ஸ்ரீமதி சத்யவதி தேவி சொன்னார்.

## காரைக்குடி பெஞ்சுக் கோர்ட்

காரைக்குடி பெஞ்சுக் கோர்ட்டின் வைஸ் பிரஸிடெண்டாக திரு. செ. ராம. பழ. நாராயணன் செட்டியாரவர்கள் நியமிக்கப் பெற்றிருக்கிறார்களெனத் தெரிகிறது.





கல் தேர்—

ஒரே கல்லில் செதுக்கி யெடுக்கப்பட்ட ஆச்சரிய கல் ரதம். ஹம்பி வித்தோபா ஆலயத்தின் பக்கத்தில் நிற்கிறது. சக்கரங்கள்கூட கல்லினால் செய்யப்பெற்றவைதான்.

—M. Vasan.



வித்தோபா ஆலயம்—

ஹம்பியில் காணப்படும் மனோஹராலயம். இதுவும் 'அநாதி' யாகவே இருக்கிறது.

—M. Vasan.



சான்செலர் சர். ரெட்டி—

ஆந்திரா சர்வகலாசாலையின் பட்டமளிப்பு விழா நடைபெற்றபோது சென்னை ஆக்டிங் கவர்னர் சர் கே. வி. ரெட்டியவர்கள் தலைமை வகித்தார். படத்தில் ரெஜிஸ்திரார் மிஸ்டர் சி. டி. சுப்பிரமணியம் செட்டி, சான்செலர் சர் ரெட்டி, வைஸ்-சான்செலர் திரு. ஸி. ஆர். ரெட்டி மூவரும் நிற்கின்றனர்.

—P.P.B.

**மே. த. கே. வி. ரெட்டி—**

***சர் கே. வி. ரெட்டி வியாழக்கிழமை ஆரம்பமான சட்டசபைக்கு 'ஸ்டேட் கோச்'சில் சென்றார். சென்னை சட்டசபையில் பேசிய முதல் இந்திய கவர்னர் சர் ரெட்டிதான்.***

**—P. P. B.**





திருச்சி—

*காவேரி நீராட்டம்.*

—M. Vasan.





சென்னை—

*கடலாட்டம்.*

—M. Vasan.



பம்பாயில் தமிழ்நாட்டார்—

போன வாரம் பம்பாயில் நடைபெற்ற காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டத்தின்போது திரு. முத்துரங்க முதலியார் தமிழ்நாட்டு பிரதிநிதிகள் சிலருடன் பேசிக்கொண்டிருந்தார்.

—C.B.



வீரர் முன் பத்திரிகை—

போன வாரம் பம்பாய் நிருபர்கள் சங்கத்தார் வீரர் நேருவுக்கு விருந்தளித்தனர். அதில் பண்டிதர் பேசுகிறார். எல்லேப்புற காந்தி, படேல், புலபாய், தௌலத்ராம், கிருபாலினி, பிரஸ்வி முதலியோர் விஜயம் செய்திருக்கிறார்கள். இடது கடைசியிலிருப்பவர் ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி பண்டிதர் (நேருவின் சகோதரி.) அடுத்தவர் 'டைம்ஸ் ஆப் இந்தியாவைச் சேர்ந்த மிஸ்டர் பிரான்சிஸ் லோ. நான்காவதிருப்பவர் திரு. ஹார்னிமன். பண்டிதரின் இடது பக்கமிருப்பவர் மிஸ்டர் பிரல்வி ('பம்பாய் கிராணிகில்') மற்றவர்களேயும் கண்டுபிடிக்க.

—C.B.



# பாலித் தீவின் தமிழர் மணம்

## சோழ பாண்டியரின் ஜோதி

(நீல்கன் பெருமாள்)

சிங்களம் புட்பகம் சாவகம்—ஆதிய
தீவு பலவினுஞ் சென்றேறி—அங்கு
தங்கள் புலிக்கொடிமீன் கொடியும் [நின்று
சால்புறக் கண்டவர் தாய்நாடு.

என்ற பாரதியார் பாட்டு தமிழர்க்கு புதிதன்று. ஆனல் சிங்களம், புட்பகம், சாவகம் ஆகிய நாடுகளில் சோழ பாண்டிய அரசர்கள் தமிழ்க் குடியேற்ற நாடுகளைக் கண்டார்கள் என்பது புதிதாக விருக்கலாம். இன்று பிரெஞ்சு இந்தோ சைனு, சியம், மலாயா என்று அழைக்கப்படுகிற தேசங்களும், சுமத்திரா, ஜாவா, போர்னியோ, செலிபிஸ், ந்யூகினி என்கின்ற கிழக்கிந்திய தீவுக்கூட்டமும் ஒரு காலத்தில் தமிழர் ஆதிக்கத்துக்குள்பட்ட நாடுகளாயிருந்தன. இந்தியப் பழம் பெரும் நாடுகள் 56ஐக் கூறும்போது காம்போஜம் என்ற ஒன்றைக் குறிப்பிடுவது நேயர்கட்குத் தெரிந்திருக்கலாம். அந்த காம்போஜம்தான் இன்று கம்போடியா என்று வழங்கப்படுகிறது; பிரெஞ்சுக்காரர்கள் ஆட்சி செலுத்துகிறார்கள். அந்த நாடும், அதனை அடுத்துக் கடல் நடுவில் மிதக்கும் எண்ணிறந்த சிறு தீவுகளும் தமிழ் வாடையும், இந்திய நாகரிக கந்தமும் வீசக் காண்கிறோம். அவற்றை சோழனே, பாண்டியனே யார் அடக்கினுலும் ஆண்டாலும் சரி, இன்று அங்கு தமிழர் நாகரிகமும் தமிழ்ச் சுவையும் ததும்பி நிற்கின்றதென்பதற்குச் சந்தேகமில்லை. சுமார் 100 வருடங்கட்கு முன்பு ந்யூஜிலாந்தில்* வில்லியம் காலென்சோவென்ற ஒரு பாதிரியார் வெண்கல மணியொன்றைக் கண்டுபிடித்தார். அதில் "முகையதீன் பக்ஷ—டைய கப்பல் மணி" என்று செந்தமிழில் எழுதப்பட்டிருக்கிறது. இது போல் மேற்படி தீவுகளில் ஆங்காங்கு கிடைக்கும் சான்றுகள் பலப்பல. ஈண்டு பாலி தீவில் காணப்படும் இந்திய (தமிழ்) நாகரிகத்தைப் பற்றி நேரில் கண்ட திரு. நீல்கன் பெருமாள் எழுதியிருக்கும் சில குறிப்புகளைத் தருவோம்:—

### சரித்திரம்

பாலி, ஜாவா (சாவகம்)வின் தொடர்ச்சியாக அதன் கீழ் திசையில் இருக்கும் ஒரு சிறு தீவாகும். அதனை டச்சுக்காரர்கள் ஆள்கின்றார்கள். சிங்கார்ஜா என்ற ஊர் டச்சு கவர்னரின் தலைநகரம். ஆயினும் உண்மையில் அத்தீவை ஆட்சி செய்பவர்கள் பாலி தலைவர்களாம். அவர்களெல்லாம் டச்சுக்காரர்கள் வருவதற்கு முன் அரசாண்டுவந்த சிற்றரசர்களின் சந்ததிகள். டச்சுக்காரர்கள் 1597 லேயே பாலியைப் பார்த்தார்களாம்; ஆனல் 18-வது நூற்றாண்டில் ஈஸ்ட் இந்தியா கம்பனிகள் வலுப்பெற்றபோதுதான் அதிகமாக பாலியோடு நெருங்கி சம்பந்தம் கொண்டனர்கள். அந்த சம்பந்தத்தை பாலி மக்கள் உருசியுடன் ஏற்றுக் கொள்ளவில்லை. எனவே சண்டையிட்டதில் டச்சுக்காரர்கள் போர் புரியலானர்கள். கடைசியாக டச்சுக்காரர்களோடு போர் புரிந்த அரசர் 1908-ல் தம் தோல்வியைக் கண்டு சோர்ந்து தற்கொலை புரிந்து கொண்டார்.

### இயற்கையழகு

பாலி தீவு காடு மிகுந்த தேசம். ஏராளமான ஏரிகள், நீரோடைகள் வயல்கள் காணப்படுகின்றன. அவற்றைத் தனித்துக்கொண்டு பல ஆலயங்கள் எட்டிப்பார்க்கக் காணலாம். அவைகள் இயன்றவரை தமிழ்ச் சிற்ப முறையையே பின்பற்றியிருக்கும். தம்பாக்ஸிரிங் என்ற இடத்தில் சில மலைக்குகைகள் காணப்படுகின்றன. அவற்றில் காலஞ்சென்ற அரசர்களின் பிணங்கள் பக்குவம் செய்யப்பட்டு வைக்கப்பட்டிருக்கின்றன.

பாலியின் மொத்த விஸ்தீரணம் 105 சதுர மைல்; இருந்தாலும் 10 லட்சம் பேர் வசித்து வருகிறார்கள். இவர்களெல்லாம் ஜாவாவிலுள்ளவர்களென்றும் 16-வது நூற்றாண்டில் மகாஜிபாத் என்ற இந்து அரசர் முஸ்லிம்களால் தோற்கடிக்கப் பெற்றபோது, மகமதிய



* ந்யூ ஜிலாந்து ஆஸ்திரேலியாவின் தென்கிழக்கு மூலையில் இருக்கும் ஓர் தீவு. ஏறக்குறைய தென்பனி மண்டலத்தையே அண்மியது.

மதத்தைத் தழுவ மனங் கொள்ளாது பாலியில் சரணடைந்தார்களென்றும் சொல்லப்படுகிறது.

இந்து முறைகள்

பாலி மக்களுக்குள் ஐந்து ஜாதிகள் காணப்படுகின்றன. இந்தியாவிலிருப்பது போல பிராமண, க்ஷத்திரிய, வைசிய, சூத்ர ஜாதிகள் நான்கோடு சண்டாளர் என்ற ஐந்தாவது ஜாதியும் காணப்படுகிறது. இந்த கடைசி ஜாதியார் இந் நாட்டு தீண்டாதாரைப் போல நடாத்தப்படுகின்றனர். இவர்கள் கீழ் கடைசியிலிருக்க, மேல் நுனியில் பிராமணர் இருக்கின்றனர். அவர்கள் வைதிகத் தொழிலைத் தவிர வேறு எதிலும் புகுவதில்லை. அவர்கட்குள் இரண்டு ஜாதியுண்டு. ஒன்று ஸிவா. மற்றொன்று புதா. இவற்றுள் ஸிவாதான் மிக உயர்ந்த வகுப்பு.

பாலிமக்கள் ஆரோக்கியமானவர்கள். உயரமாகவும், சதைப்பற்றுடையவராகவும் உறுதியான அங்க அமைப்புடையவராகவும் காணப்படுவர். நிறம் இட்டத்தட்ட மாநிறம் என்று சொல்லலாம். வட்ட முகம், குட்டையான பெரிய மூக்கு, கனமான உதடு, அகன்ற கண்கள்—முதலியவற்றை ரோக்கினல் சாதாரணமாகவல்ல தோற்றம்போல் காணப்படும். தலைமயிர் கறுப்பாக சுருண்டு வளரும். வெள்ளி, பொன் நகைகளை அணிகின்றனர். நறுமணமுள்ள மலர்களை தலையிலும் உடம்பிலும் அணிவர். பெண் வண்டித்தை பெரிதாக மதிப்பதில்லை. நெஞ்சு முதல் முழங்கால் வரையிலும் சாராங் என்ற துணியால் மூடிக்கொள்கிருர்கள். ஏழைகள் இடுப்புக்குமேல் மூடுவதில்லை.

கல்யாணம்

கல்யாண முறை ஏறக்குறைய இந்துக்களைப் போன்றது தான். பெற்றோரே மணத்தை நடத்துகின்றனர். மணமகன் மணமகளின் தந்தைக்கு விவாகத்திற்கு முன்பு ரூபாய் 45 கொடுத்து பெண்ணை வாங்கிக் கொள்கிறன். கல்யாணத்தை நடத்த பிராமண புரோகிதர் வருவர். செருப்பு வனர்த்து அதன் முன் மணவினை முடிக்கப்படும்.

ஏகதார விரதம்

பாலி மக்கள் ஒரு துணைவியையே கொள்வர். அபூர்வமாக பணக்காரர்கள் பல மனைவிகளைக் கட்டுவதுண்டு. ஒழுக்கத்தில் பெண்கள் மிகக் கட்டுப்பாடானவர். ஆடவர் பெண்களை சாலவும் மரியாதையாக நடாத்துகின்றனர்.

சதி

இந்தியப் பெண்களைப் போலவே பாலிப் பெண்கள் விதவைக் கோலத்திற்கு ஆளாகி இருக்கின்றனர். எனப தோடு சதி (உடன் கட்டையேறல்) என்ற சண்டாள வழக்கத்திற்கு மாளாகி யிருந்தார்கள். டச்சு ஆட்சி வலுப்பட்டதோடு, 1903-ல் சர்க்கார் ஆணையில், அவ்வழக்கம் ஒழிக்கப்பட்டது. சரித்திரத்திற்கு வரும் கடைசி சதி 1903-ல் தான் நடைபெற்றதாகத் தெரிகிறது. தாப்னன் என்ற ஓர் அரசர் அவ்வாண்டில் காலமானர். அவரது ஆசைக்காதலி உடன் கட்டையேறினாராம்.

ஈமக்கடன்

பாலியில் மரணச் சடங்கு பிரமாதமானதாகும். சாதாரண ஜனங்கள் இறந்தால் உடம்பு ஒன்றிரண்டு நாள் வைக்கப்பட்டு எரிக்கப்படும். பெரிய பணக்காரர்களோ அரசர்களோ இறந்தால் சில வருடங்கள்வரை அவர்களது உடம்பு பாதுகாக்கப்படுவதுண்டு.

சவசம்ஸ்காரம் செய்யும் தினத்தை பிராமணர்களே நிச்சயிக்கின்றனர். பெரும்பான்மையும் நிலா வெளிச்சமோ மழையோ இல்லாத நாள்தான் சம்ஸ்காரத்திற்குத் தேர்ந்தெடுக்கப்படுகிறது. பிணம் கொண்டுசெல்லப்படும்போது ஊர்வலத்தில் கலந்து கொள்வோர் பிற்புறம் திரும்பி பிணத்தைத் தொடர்ந்து வருவதாகக் கருதப்படும் பிசாசைத் துரத்துவர். சுடுகாட்டில் வந்திருப்பவர்கட்கு பலகாரம் கொடுப்பார்கள். பிணத்தோடு (நம் நாட்டைப்போல) கோழிக் குஞ்சு ஒன்றை சுடுகாட்டுக்குக் கொண்டுசெல்வார்கள். பாலி மக்கள் இறந்தவர் ஆன்மாவை கோழிக்குஞ்சே சுவர்க்கத்திற்கு எளிதில் கொண்டு செல்லுமென்று கருதுகின்றனர். சவ சம்ஸ்காரத்தின் பிறகு சாம்பலை எடுத்து கடலிலோ கடலோடு கலரும் ஆற்றிலோ கரைக்கிருர்கள்.

நடனம்

நடனக் கலையை பாலி மக்கள் போற்றி வருகிருர்கள். ஆடவர்களும் பெண்களும் நடனம் செய்வார்கள். ஆனல் குழந்தை பெற்ற பெண்களோ, 15 வயதுக்கு மேற்பட்ட மங்கையரோ நடனம் செய்ய வருவதில்லை. நடனம் செய்யும்போது பல வர்ணங்களிலுள்ள ஆடைகளை அணிந்து உடம்பில் வாசனை தரும் பல பொருட்களை பூசியிருப்பார்கள்.

---




குறைந்த விலை! நிறைந்த சுகம்!!

லி பா பு த் த க ம் இ னு ம்

வெய்யிற் காலத்தில் நெருப்பண்டை வாடாமல் சுகம் பெறவேண்டுமானல்

ருக்மணி குக்கர்

ஒன்றை உடனே வாங்குங்கள்.

1, 2, 4, 6, 8, 16

பேர்களுக்குரிய குக்கரின் விலை ரூ.

12, 16, 21, 26, 32, 38.

ருக்மணி குக்கர் கம்பனி,

ராயபுரம், (10) சென்னை.

ஏஜண்டுகள்

1. காரைக்குடி:—கே. ஜி. அண்டு கோ.,
2. புதுக்கோட்டை:—சம்பந்தம் & கோ., கீழ ராஜவீதி.
3. திருச்சி:—முத்துகுமாரசாமி பிள்ளை, ஜெனரல் மோட்டார் ஸ்டோர்ஸ்.




குன்றக்குடி

சிராம காங்கிரஸ் கமிட்டி நியமனம்

27—8—36௳ பிற்பகல் 3 மணிக்கு வாலிபர் சங்க கட்டிடத்தில் திருப்பத்தூர் தாலுகா காங்கிரஸ் கமிட்டி காரியதரிசி ஸ்ரீமான் சு. கந்தசாமி பிள்ளை அவர்கள் தலைமையில் காங்கிரஸ் அங்கத்தினர்கள் கூட்டம் நடைபெற்றது. இவ்வூரில் கிராமசபை ஏற்படுத்தி அடியில் கண்டவர்களை உத்தியோகஸ்தர்களாக நியமிக்கப்பட்டிருக்கிருர்.

தலைவர் பெ. மு. கிருஷ்ணன் அவர்கள், காரியதரிசி, கு. மு. முத்துராமன் அவர்கள், பொக்கிஷதார் காமு. பக்கீர் முகமது அவர்கள்.

அங்கத்தினர்கள்

கிமு. இபுராகிம், பெ. செல்லையா, செர. சுப்பையா, சுப. பொன்னழகு, வடு. காசி, மு. நாராயணசாமி, ராம, சோமசுந்தரம், செ. ராமய்யா.

—ஒரு நிருபர்.

ஹரிஜன சிறுவர்கள் கல்வி பயில வசதி

இவ்வூர் ஜில்லா போர்டு ஸ்கூல் ஏற்பட்டதிலிருந்து ஹரிஜன மாணவர்கள் ஒருவர்கூட கல்வி கற்க முன் வாராதிருந்த குறையை நீக்க சீர்திருத்தத்தில் ஆர்வமுள்ள சில வாலிபர்கள் முயற்சியெடுத்து சுற்றுப்புறங்களிலுள்ள சேரிகளில் சென்று 20 மாணவர்களை ஸ்கூலில் சேர்த்துவிட்டு ஷெ மாணவர்களுக்கு சில அன்பர்களின் பொருளுதவி பெற்று புத்தகமும்கற்பலகையும் வாரம் மும்முறை தின்பண்டங்களும் வேஷ்டிகளை சுத்தம் செய்து கொள்வதற்கு சோப்பும் வாரம் ஒரு முறை எண்ணெய் ஸ்நானமும் இலவசமாக செய்து வைத்து வருகிருர்கள். ஒழுங்காயும் அதிக நாள் ஸ்கூலுக்கு வரும் மாணவர்களுக்கு இலவசமாய் வேஷ்டி சட்டையும் கொடுத்துதவுதற்கு வேண்டிய ஏற்பாடும் செய்து வருகிருர்கள்.

தோகையடி விநாயகர் விழா

திருக்கைலாய பரம்பரை திருவண்ணமலை ஆதீன விசாரணையிலுள்ள மயூரகிரிதோகையடி விநாயகப் பெருமானுக்கு ஈளத தாது-௵ புரட்டாசி-௴ 4-௳க்கு (19-9-36) ஞாயிறு விநாயகசதுர்த்தி யன்று காலை முதல் சங்காபிஷேகமும், மஹா அபிஷேகமும், மாலை 7 மணிக்கு புஷ்ப சப்பரத்தின் மீது வெள்ளி மூஷிக வாகனத்தில் விசேஷ அலங்காரங்களுடன் வேத பாராயணத் தேவார திருவாசக திருக்கூட்டத்துடனும் திருவீதியுலாக் காட்சி நடைபெறும் என்றும் திருவிடை மருதூர் திரு. P. S. வீருச்சாமி பிள்ளையின் மேளம் நடைபெறும் என்றும் காபி கிளப் திரு. சா. மல்லிகார்ச்சுனமய்யர் அறிவிக்கிருர்.

---

தேவகோட்டை இளைஞர் சங்கம்

பரிசளிப்பு

தேவகோட்டை இளைஞர்சங்கத்தின் சார்பாக டவுன் கோம்ஸ் ஸின்கிள்ஸ் டோர்ணமெண்ட் நடைபெற்றது. நாற்பது டீம்கள் கலந்து கொண்டன. பரிசளிப்பதற்காக இளைஞர் சங்கத்தில் காரைக்குடி ஜில்லா காங்கிரஸ் கமிட்டி காரியதரிசி திரு. மு. காசிநாதன் அவர்கள் தலைமையில் கூட்டம் நடைபெற்றது. வெற்றி பெற்ற திரு R. ஸ்ரீநிவாச கோபாலனுக்கு வெள்ளிக் கப்பும் கடலினையாடிய(ரன்னர்) திரு. K. R. S. முத்து அவர்களுக்கு வெள்ளி பதக்கமும் தலைவரால் பாராட்டிப் பேசி பரிசளிக்கப் பெற்றது என திருவாளர் (காப்டன்) ராம. கணேசன் வரைகிருர்.

---

சிரம்பான்

நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் வர்த்தக சங்கம்.

ஆகஸ்ட் 12-ந் தேதி மாலை 5 மணிக்கு ஆருவதாண்டு மூன்ருவது நிர்வாக சபைக்கூட்டம் சங்கக் காரியாலயத்தில் கூடியது. 9 நிர்வாக சபை அங்கத்தினர்கள் விஜயம் செய்திருந்தார்கள். தலைவர் திரு. கு. மு. செ, பழனியப்ப செட்டியாரவர்கள் தலைமை வகித்தார்கள. காரியதரிசியால் 25-6-36 முதல் 6-8-36 வரையிலுள்ள கணக்கு வாசிக்கப்பெற்று ஏகமனதாக அங்கீகரிக்கப் பெற்றது. சங்கத்திற்கு வந்த கடிதங்கள் வாசிக்கப பெற்று ரிக்கார்டு செய்யப் பெற்றன.

பினங்கு

நாட்டுக்கோட்டை செட்டியார்கள் வர்த்தக சங்கம்

மூன்ருவது வருட மூன்ருவது நிர்வாக சபைக் கூட்டத்தின் நிகழ்ச்சி:

நிகழும் தாது வருடம் ஆவணி மாதம் 2௳ (17-8-1936) திங்கட்கிழமை மாலை 5 மணிக்கு கூட்டம் சங்கக் கட்டிடத்தில் தலைவர் திரு. அ. மு. க. வெங்கடாசலஞ் செட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. 15 அங்கத்தினர்கள் விஜயம் செய்திருந்தார்கள். அதில் அதிக மனயா சொத்த தோட்டக்காரர்கள் சங்கத்தின் ஆலோசனை கழகத்திற்கு நம் சங்கத்தின் பிரதிநிதியாக கோனாம்பூர் ஐக்கிய மனாய் நாட்டுக்கோட்டை செட்டியார்கள் வர்த்தக சங்கத்தின் பிரதிநிதிகளையே இருந்து வரும்படி கேட்டுக் கொள்ளுவதென நிர்மாணிக்கப் பெற்றது.

பினங்கு செட்டில் மெண்டிற்கு தமிழ் கல்வி விஷயமாக அட்வைசரி போர்ட் நியமிக்க வேண்டுமென கவர்மெண்டாரை கேட்டுக் கொள்வதெனத் நிர்மானிக்கப் பெற்றது.

நம் சங்கத்தின் சார்பாக பினங்கு செட்டில் மெண்டிலுள்ள இந்து என்டோமண்ட் போர்ட் இந்து அட்வைசரி போர்ட் ஸ்தாபனங்களில் பிரதிநிதித்வம் வழங்கும்படி கவர்மெண்டாரை கேட்டுக் கொள்வதெனத் நிர்மானிக்கப் பெற்றது.

கோலப்பினை டிஸ்டிரிக்ட் கோர்ட்டில் காலதாமதம் ஏற்படும் விஷயமாக மேற்படியூர் நிர்வாக அங்கத்தினர் தெரிவித்தபடி நம் சங்கத்திற்கும் டிஸ்டிரிக்ட் ஜட்ஜுக்கும் நடந்த கடிதப் போக்குவரத்துகளை வாசித்துக் காண்பிக்கப்பெற்று ரிகார்டு செய்யப் பெற்றது.

மணிலெண்டர் சட்ட சம்பந்தமாக டி. இ. பாங்கள் உபயோகிக்கும் முறையை விளக்கிக் கூறப்பெற்றது.

---

வெளிச்சம் ஒரு வினாடியில் லட்சத்து எண்பத்தாருயிரம் மைல் தூரம் சஞ்சாரம் செய்கின்றது.

### நடுவிக் கோட்டை

**ஜவஹர் கால் பந்தாட்ட கிளப்**

நிகழும் தாது ஆண்டு ஆவணித் திங்கள் 9-ம் நாள், திங்கட்கிழமை (24-8-36) மாலை 4 மணிக்கு தேசிய வாலிபர் சங்கத்தினுதவில் ஜவஹர் கால் பந்தாட்ட கிளப் என்னும் ஓர் விளையாட்டு நிலயம் ஏற்படுத்தப்பட்டது. இதை நிர்வாகக் கமிட்டி அங்கத்தினரான ஸ்ரீமான் தொ. காளியப்பனம்பலம் அவர்களால் திறந்து வைக்கப் பெற்றது. காரியதரிசி வே. சுப்பய்யா பிள்ளையவர்கள் அவ்விடத்தில் தேசியக் கொடி ஒன்றும் ஏற்றி வைத்து தேகப் பயிற்சி என்னும் விஷயம் பற்றி சிறந்தோம் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள்.

**தேசிய வாலிபர் சங்கம்**

23-8-36-ந்தேதி மாலை 5 மணிக்கு தேசிய வாலிபர் சங்கத்தின் ஆதரவில் ஓர் பொதுக்கூட்டம் தலைவர் தொ. அடைக்கலவன் சேர்வை அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அவ்வமயம் அடியிற் கண்ட விஷயங்கள் ஏகமனதாய் தீர்மானிக்கப்பட்டன.

1. மாஜி தமிழ் மாகாண காங்கிரஸ் கமிட்டி தலைவர் திரு. ராஜகோபாலாச்சாரியாரவர்கள் ராஜினாமாவை வாபீஸ் வாங்கிக்கொள்ள முடியாதென பிடிவாதமாய் சொல்லி, இத்தருணத்தில் காங்கிரசினின்று விலகியிருப்பதற்கு இச்சங்கம் வருந்துகிறது.

2. திருச்சி முனிசிபல் தேர்தலில் டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன் காங்கிரசின் கட்டுப்பாட்டை மீறி, தான் எதேச்சாதிகாரமாக நடந்து கொண்டதை இச்சங்கம் பலமாக கண்டிக்கிறது.

3. நமது தேசியத் தலைவர் சுபாஷ் சந்திர போசை காரணமின்றி அரசாங்கத்தார் அரெஸ்டு செய்து, விசாரணை செய்யாது பந்தோபஸ்தில் வைத்திருப்பதை கண்டித்தும், அவரை உடனே விடுதலை செய்யவேண்டுமென்றும் இச்சங்கம் தீர்மானிக்கிறது.

4. எல்லைப்புறக் காந்தி கான் அப்துல் கபர்கான் விடுதலை யடைந்தும் பஞ்சாலத்திலும், எல்லைப்புறத்தின் எல்லைக்குள்ளும் நுழையக்கூடாதென்று தடையுத்தரவு பிறப்பித்திருப்பதை முன்னிட்டு அரசாங்கத்தின் செய்கையை இச்சங்கம் கண்டிக்கிறது.

5. சங்கத்தில் அங்கத்தினராய் சேர்ந்திருக்கிறவர்கள் யாவரும் சந்தாத் தொகையை பாக்கியன்னியில் செலுத்த வேண்டுமென்றும், சுத்தக் கதரையே உபயோகிக்கவேண்டுமென்றும் தீர்மானிக்கிறது.

### மூர்த்தி விலாஸ் வைத்தியசாலை திறப்பு விழா

காரைக்குடி முனிசிபல் சேர்மென ஸ்ரீமான் M. S. M. M. மெய்யப்ப செட்டியார் நடத்திவரும் தர்ம வைத்தியசாலை புதிய கட்டிடத்தை நேற்று மாலை 4-30 மணிக்கு சிவ கெங்கை சமஸ்தானம் திவான் R. M. சுந்திரம் I. C. S. திறந்து வைத்தார். திறப்புவிழா தலைவருக்கு வைத்யசாலை டாக்டர் நமசிவாயம் வரவேற்புப்பத்திரம் வாசித்துக் கொடுத்தார். திவான் அவர்கள் திறந்து வைத்து ஷை வைத்தியசாலை ஜனங்களுக்கு அதிக உபயோகமாக இருப்பதைப்பற்றி விளக்கிப்பேசினார். ஷை வைத்தியசாலையானது சித்த வைத்திய முறையில் நடைபெறுவதை பாராட்டியும் டாக்டர் நமசிவாயம் வைத்திய திறமையைப் பற்றியும் விளக்கிப் பேசினார். பின்னர் AR. RM. AR. சொக்கலிங்கம் செட்டியார் திருப்பத்தூர் லோகல் பண்டு டாக்டர் ஆகியவர்கள் வைத்திய சாலையின் சிறப்பைப்பற்றி பேசினார்கள். கூட்ட முடிவில் மாலை 5-30 மணிக்கு ஒரு தேனீர் விருந்து நடைபெற்று புகைப்படம் எடுக்கப்பட்டது. பின்பு ஓர் சங்கீதக் கச்சேரி நடைபெற்றது. டாக்டர் நமசிவாயத்திற்கு அநேக நண்பர்களால் நன்கொடை அளிக்கப்பட்டது. இரவு 8 மணிக்கு சுமார் 2000 பேர் கொண்ட ஓர் பெரிய விருந்து நடை பெற்றது.

### இந்திய ராணுவக் கலாசாலை

டாக்டர் மூஞ்சே பான்லேலே இராணுவக் கலாசாலைக்கு இடம் வாங்குவது சம்பந்தமாக நாசிக் கலக்டருடன் பேசி வருகிறார். மொத்தம் 125 ஏக்கர் நிலம் வேண்டுமாம். அந்த நிலத்தை டாக்டர் மூஞ்சே குறிப்பிட்டு விட்டார். பேச்சு வெற்றியடையுமென்று அவர் கூறுகிறார்.

## அபேட்சகர்கள் முன் வருக !

**திரு. சத்தியமூர்த்தி அறிக்கை**

தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவர் திரு. சத்தியமூர்த்தி கீழ்க்கண்ட அறிக்கையை அனுப்பியுள்ளார்:—

சென்னை மாகாண பார்லிமெண்டரி கமிட்டியார், புதிய அசம்ப்ளி சட்டசபை தேர்தல் கட்கு அபேக்ஷகர்களாக நிற்க விரும்புபவர்கள் நவம்பர் 1-ந் தேதிக்குள் தங்கள் விண்ணப்பங்களை அனுப்பிவிட வேண்டுமென தீர்மானத்திருக்கிறார்கள். ஆதலால் தேர்தலில் நிற்கவிரும்புபவர்கள் தங்கள் மனுக்களை சென்னை காங்கிரஸ் மண்டபத்திற்கு அனுப்புக. எங்கெங்கெல்லாம் சாத்தியமோ அங்கங்கெல்லாம் விசேஷ, பொது ஸ்தானங்கட்கு தேர்தலில் காங்கிரஸ் கலந்து கொள்ள வேண்டுமென பார்லிமெண்டு போர்டார் கருதுகின்றனர். தேர்தலுக்கு நிற்க விரும்புவோர் காங்கிரஸ் மண்டபத்திலிருந்து உரிய பாரங்களைப் பெற்றுக் கொள்ளலாம்.

தேர்தலில் சரியான அபேட்சகர்களை நியமிக்கவும் பொறுக்கியெடுக்கப்பட்ட நபர்கள் தேர்தலுக்குப் பின்னும்கூட விஸ்வாசமாக காங்கிரஸ் கட்சியிலேயே இருக்கும்படியானவர்களைத் தேர்ந்தெடுப்பதற்காகவும், நாம் பூரா விஷயங்களையும் அறிவதன் பொருட்டு, ஜில்லா தாலுக்கா காங்கிரஸ் கமிட்டியினர் அவரவர்கள் ஜில்லாக்களில் சுற்றுப் பிரயாணம் செய்து, அவசியமான விஷயங்களைச் சேர்த்து தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியினருக்கு அறிவிக்கும்படியாகக் கேட்டுக் கொள்கிறேன். ஆயினும் காங்கிரஸ் அபேட்சகர்கள் நியமிக்கும் விஷயமாக உள்ளூர் காங்கிரஸ்காரர்கள் அபிப்பிராயத்தையும் நன்கு கலந்தாலோசித்து முடிவாக யாரை நிறுத்துவதென்று சிபார்சு செய்வதற்காக, இது சம்பந்தமாக நியமிக்கப்பட்டிருக்கும் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின சப்-கமிட்டியினர் அக்டோபர் மாதத்தில் மாகாணத்தில் சுற்றுப் பிரயாணம் செய்வார்கள்.



# திருச்சி முனிசிபல் தகராறு

## காங்கிரஸ் கமிட்டி முடிவு

திருச்சி நகர சபைத் தலைவர் தேர்தல் தகராறு சம்பந்தமாக புதன் 26-8-36-ல் நடைபெற்ற தமிழ்நாடு காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டத்தில் கீழ்கண்ட தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

சென்ற ஜூலை மாதம் திருச்சி நகர சபைக்குத் தேர்தல் நடைபெறுவதாகவிருந்தது; தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் பொது நடைமுறைப்படி, மாகாணக் கமிட்டியார் திருச்சி காங்கிரஸ் வாதிகளுடன் தேர்தலில் கலந்து கொள்ளுவதைப்பற்றி ஆலோசனை செய்தார்கள். இதற்காகத் திருச்சியில் நடந்த காங்கிரஸ் வாதிகள் கூட்டத்திற்குத் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவரே போயிருந்தார். காங்கிரஸ் பெயரால் தேர்தலில் போட்டியிட வேண்டுமென்ற அபிப்பிராயத்திற்கு ஆதரவு பலமாக விருந்தது. டாக்டர் ராஜன் இதற்கெதிராக அபிப்பிராயம் தெரிவித்தார். ஜூலை 9-ந் தேதி பாகனேரியில் நடைபெற்ற தமிழ்நாடு காங்கிரஸ் நிர்வாகக் கமிட்டியில் இப்பிரச்னை புனராலோசனை செய்யப்பட்டது. மறுபடியும் திருச்சிக்குப்போய் ஸ்தல காங்கிரஸ் அபிப்பிராயத்தைத் தெரிந்து கொண்டு முடிவு செய்யும்படிக் காங்கிரஸ் கமிட்டித் தலைவர் கேட்டுக் கொள்ளப்பட்டார். அப்படியே ஜூலை 10-ந் தேதி திருச்சி காங்கிரஸ் வாதிகளை அவர் கலந்து கொண்டார். காங்கிரஸ் முனிசிபல் தேர்தல்களில் கலந்து கொள்ள வேண்டுமென்ற அபிப்பிராயத்திற்கு அப்போதும் பலமான ஆதரவிருந்தது. அதன் பேரில் காங்கிரஸ் பெயரால் அபேட்சகர்களை நிறுத்துவதென்று தீர்மானிக்கப்பட்டது. இந்தத் தீர்மானம் காலக் கிரமத்தில் அமுலுக்குக் கொண்டு வரப்பட்டது.

**அபேட்சகர் தேர்ந்தெடுப்பு**

இந்தத் தீர்மானத்திற்குப் பிறகு, தாம் ஒரு வார்டில் அபேட்சகராய் நிற்கப் போவதாக டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன் அறிவித்தார். அவர் காங்கிரஸ் உறுதிமொழிப் பத்திரத்தில் கையெழுத்திட ஒப்புக்கொள்ளவில்லை யென்றும் அவர் சுயேச்சையாய் நிற்க விரும்புவதாகவும் தமிழ்நாடு காங்கிரஸ் உபதலைவருக்குச் செய்தி கிடைத்தது. ஆகவே, அவருக்கெதிராகக் காங்கிரஸ் அபேட்சகரொருவரை நிறுத்துவதென்று திருச்சி காங்கிரஸ் கமிட்டியார் தீர்மானித்தார்கள். அவ்வாறு செய்யவேண்டியதில்லையென மாகாண காங்கிரஸ் உபதலைவர் யோசனை கூறியதுடன், டாக்டர் ராஜன் அபேட்சகராக நிற்பதாயின் காங்கிரஸ் உறுதிமொழிப் பத்திரத்தில் கையெழுத்திட வேண்டுமென்றும் தந்தி கொடுத்தார். டாக்டர் ராஜன் உறுதிமொழிப் பத்திரத்தில் கையெழுத்திட்டதால் எதிர்ப்பின்றித் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

**காங்கிரஸ் வெற்றி**

தேர்தல் முடிவில் 36 ஸ்தானங்களில் 21 ஸ்தானங்களைக் காங்கிரஸ்காரர் பிடித்தார்கள். ஆகஸ்ட் 10-ந் தேதியன்று தலைவர் தேர்தல் நடைபெற வேண்டுமென்று சர்க்காரால் அறிவிக்கப்பட்டது. ஐந்து காங்கிரஸ் வாதிகள் தலைவர் தேர்தலுக்கு நிற்க விரும்பினார்கள். அவர்கள் வருமாறு:-ஸ்ரீமான்கள் பி. ஆர். தேவர், டாக்டர் ராஜன், பொன்னையா பிள்ளை, எப். ஜி. நடேசய்யர், டாக்டர் டி. வி. எஸ். சாஸ்திரி. காங்கிரஸ் மெம்பர்கள் ஒரு முடிவுக்கு வரக்கூடாமல் சிறு பிரிவுகளாகப் பிரிந்திருந்தனர். தாம் தலைவராக விருந்த காலத்தில் நகரசபை கலைக்கப்பட்டதால், தாமே மீண்டும் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்று ஸ்ரீமான் தேவர் கூறினார். ஸ்தலஸ்தாபன மந்திரியின் அநீதமான செய்கைக்கு அதுவே தகுந்த பதிலாகுமென்றும் அவர் சொன்னார். காங்கிரஸ் கட்சியில் பெரும்பான்மையோர் தம்மை யாதரிப்பதாகவும் அவர் கூறினார். டாக்டர் ராஜனும் மற்ற அபேட்சகர்களும் இதை யொப்புக் கொண்டார்கள். காங்கிரஸைச் சேராத மற்றவர்கள் ஆதரவு தங்களுக்கே அதிகமாயிருக்கு மென்று மாத்திரம் அவர்கள் சொல்லினர். காங்கிரஸைச் சேராத அங்கத்தினர்கள், ஸ்ரீமான் தேவர் தேர்ந்தெடுக்கப் படுவதை விரும்பவில்லை யென்பதில் சந்தேகமில்லை. ஆனால் இதற்காகக் காங்கிரஸ் கட்சியில் பெரும் பான்மையோ ரபிப்பிராயத்தைப் புறக்கணிக்க முடியாது. டாக்டர் சாஸ்திரிக்கும் ஸ்ரீமான் நடேசய்யருக்கும் காங்கிரஸ் மெம்பர்களிடையில் ஆதரவேயில்லை. ஸ்ரீமான் பொன்னையாபிள்ளையை நான்கு காங்கிரஸ் மெம்பர்கள் ஆதரித்தார்கள்.

காரியக் கமிட்டி யங்கத்தினர்களும், ஸ்தல ஸ்தாபனங்களில் காங்கிரஸ், கட்சி வேலையை விசாரிக்க நியமிக்கப் பட்டவர்களுமான ஸ்ரீமான்கள் குமாரசாமி ராஜா, பி. ராமசாமி ரெட்டியார், எம். பக்தவத்ஸலம் ஆகியோர் நகரசபை மெம்பர் தேர்தலுக்குப் பின்பும் தலைவர் தேர்தலுக்கு முன்பும் திருச்சிக்குச் சென்று ஸ்தல நிலைமையைத் தெரிந்து கொண்டார்கள். காங்கிரஸ் கமிட்டி தலைவர் வேண்டு கோளின்படி ஸ்ரீமான் ஸி. ராஜகோபாலாச்சாரியார் ஆக 3-ந் தேதியன்று தலைவர் பதவி யபேட்சகர்களை யெல்லாம் கண்டு நிலைமையைத் தெரிந்து கொண்டார். காங்கிரஸ் மெம்பர்களில் பெரும்பான்மையோர் ஸ்ரீமான் தேவரையே ஆதரித்தார்கள். எனினும் அவர் ஏற்கனவே ஜில்லா போர்டு தலைவராகவிருக்கிறாரென்று ஆக்ஷேபனை சொல்லப்பட்டது. சர்க்கார் செய்த தவறுகளுக்குப் பதிலளிக்கவும், தம் கௌரவத்தை நிலை நாட்டவும் நகரசபைத் தலைவர் பதவி தமக்கு வேண்டுமென்று ஸ்ரீமான் தேவர் கூறினார். தேர்தலுக்குப் பிறகு தாம் ராஜினாமாச் செய்துவிட்டுத் தம் ஸ்தானத்திற்கு டாக்டர் ராஜன் வருவதை யாதரிக்கவும் அவர் ஒப்புக் கொண்டார். இதை யவர் எழுதியும் கொடுத்தார். சம்பந்தப் பட்டவர்கள் ஒப்புக் கொண்டனர். இந்த யோசனையை டாக்டர் ராஜன் ஒப்புக் கொள்ளவில்லை.

**காரியக்கமிட்டி கூட்டம்.**

ஆகஸ்டு 5, 6-ந் தேதிகளில் காரியக் கமிட்டி கூட்டத்தில் இவ்விஷயம் ஆலோசனைக்கு வந்தது. டாக்டர் ராஜனும் ஸ்ரீமான் தேவரும் அழைப்பின் பேரில் அங்கே வந்திருந்தனர்.

ராஜாஜி டாக்டர் ராஜனுடன் வெகுநேரம் பேசினார். ஸ்ரீமான் தேவரை அபேட்சகராகப் போடுவதாகவிருந்தால் தாம் கட்சி முடிவை மீறப்போவதாக டாக்டர் ராஜன் கூறினார்; இதன் விளைவு கடுமையானதாகுமென்று எடுத்துச் சொல்லப்பட்டும் டாக்டர் ராஜன் பிடிவாதமாக விருந்தார். காங்கிரஸ் கமிட்டி அபேட்சகரை போடக்கூடாதென்றும், கட்சித் தீர்மானமன்றி இஷ்டம்போல் ஓட்டுச் செய்யக் காங்கிரஸ் மெம்பர்கள் அநுமதிக்கப்பட வேண்டுமென்றும் டாக்டர் ராஜன் வற்புறுத்தினார். காரியக்கமிட்டி கூடுமுன்பு ஸ்ரீமான்கள் பி. எஸ். குமாரசாமி ராஜா, பி. ராமசாமி ரெட்டியார், எம். பக்தவத்ஸலம் ஆகியோர் டாக்டர் ராஜனைக் கண்டு பேசினார்கள். அதற்குப் பின்னும் டாக்டர் ராஜன் தம் தீர்மானத்தை மாற்றிக்கொள்ளவில்லை. காங்கிரஸ் கட்சியில் பெரும்பான்மையோர் ஸ்ரீமான் தேவரை ஆதரிக்கிறார்களென்பதை அப்போதும் அவர் ஒப்புக்கொண்டார்.

நகரசபைத் தலைவர் பதவிக்கு அபேட்சகரைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பை ஸ்தல காங்கிரஸ் கட்சிக்கு விடலாகாதென்றும், காரியக்கமிட்டியாரே அபேட்சகரை நியமிக்கலாமென்றும் இல்லாவிட்டால் காங்கிரஸ் வாதிகள் யாரும் அபேட்சகராக நிற்றலாகாதென்று உத்தரவிட்டு விடலாமென்றும் ஆக 3-ந் தேதியிட்டு டாக்டர் சாஸ்திரி ஒரு கடிதமெழுதினார்.

நான்கு வழிகள்.

இந்த நிலைமையில் காங்கிரஸ் காரியக் கமிட்டியார் நான்கு வழிகளைத் தான் கையாண்டிருக்கக் கூடும்.

(1) காங்கிரஸ் கட்சியில் சிறுபான்மையோர் எதிர்ப்பதைப் பொருட்படுத்தி ஸ்ரீமான் தேவரை விட்டு டாக்டர் ராஜனையோ வேறு யாரையோ அபேட்சகராகப் போட வேண்டும்.

(2) ஸ்தல காங்கிரஸ் கமிட்டியார் அபேக்ஷகரைத் தேர்ந்தெடுக்கட்டுமென்று விட்டுவிட வேண்டும்.

(3) ஸ்தல காங்கிரஸ் கட்சியின் போக்கைக் கவனித்து ஸ்ரீமான் தேவரை அபேட்சகராக நிறுத்த வேண்டும்.

(4) யாரையும் நிறுத்தாமல் 36 பேரடங்கிய நகர சபையோர் யாரையாகிலும் தேர்ந்தெடுத்துக் கொள்ளட்டுமென்று விட்டுவிட வேண்டும்.

முதல் வழியைப் பின்பற்ற நியாயமேயில்லை. அப்படி செய்வது காங்கிரஸுக்கு எதிராகவுள்ள செல்வாக்கு வாய்ந்த சிலரது செல்வாக்குக் குட்படுவதாகும். காங்கிரஸுக்கு எதிராகவுள்ள அக்கோஷ்டியார் ஜஸ்டிஸ் மந்திரிகளுடன் கலந்துகொண்டு ஸ்ரீமான் தேவர் தலைவர் பதவிக்கு வாராதவழியைத் தேடினர். ஸ்ரீமான் தேவரின் பாத்தியதையை அப்படிப் புறக்கணிப்பது மாகாண முழுவதிலுமுள்ள காங்கிரஸ் வாதிகளிடையே அதிருப்தியை உண்டுபண்ணி யிருக்கும். இரண்டாவது வழியைப் பின்பற்றலாமாவென்று முதலில் காரியக் கமிட்டியார் யோசித்தார்கள். ஆனால் இது ஒன்றுபட்டு வேலை செய்யவேண்டிய காங்கிரஸ் கட்சியில் மனக்கசப்பை யுண்டுபண்ணி விடுமென்று பிறகு தோன்றிற்று. உணர்ச்சிகள் மிகுந்திருக்கும்போது, ஸ்தல காங்கிரஸ் கட்சியில் இரு கோஷ்டிகளுக்குள்ளும் பகிரங்க யுத்தம் நடைபெறாது தடுக்கவேண்டுமென்று காரியக் கமிட்டியினர் தீர்மானித்தார்கள். அவர்களே அபேட்சகரை நியமிக்கும் பொறுப்பை யேற்றுக் கொள்ளுவது நலமெனத் தீர்மானித்தார்கள். திருச்சி காங்கிரஸ் கட்சியில் பெரும்பான்மையோர் ஸ்ரீமான் தேவரை யாதரித்தாலும் அதை எதிர்ப்பவர்களாகவுள்ள சிறுபான்மையோர் நிராகரிப்பார்களென்று நிச்சயமாகத் தெரிந்தது, இதன் விளைவு விரும்பத்தகுந்ததல்ல. நாலாவது வழியைப் பின்பற்றியிருந்தால் காங்கிரஸ் கட்சி குலைந்து போகும்; அது காரியக் கமிட்டியாரின் யதேச்சாதிகாரமாகவும் முடியும். காங்கிரஸ் கட்சியில் பெரும்பான்மையோரின் விருப்பத்தை யவ்வாறு அலக்ஷியம் செய்வதும் சரியல்ல.

நிவர்த்தி மார்க்கம்

ஆகவே மூன்றாவது வழியைக் காரியக்கமிட்டி கடைப்பிடித்தது. காங்கிரஸ் கட்சியில் பெரும்பான்மையோர் விருப்பமும் அதன் மூலம் திருப்தியாகும். பெரும்பான்மையோர் அபிப்பிராயத்தை மற்றவர்கள் மதித்து நடக்க வேண்டுமென்று உத்திரவிடக் கமிட்டிக்கு அதிகாரமுண்டு ஆதலால் ஆக 6-ந் தேதி யன்று காரியக் கமிட்டியார் கீழ்கண்ட தீர்மானத்தை நிறைவேற்றித் திருச்சி நகர சபையிலுள்ள காங்கிரஸ் கட்சியங்கத்தினர்களுக்கெல்லாம் அனுப்பி வைத்தார்கள்.

ஆக 3-ந் தேதியிட்டு டாக்டர் சாஸ்திரியும், ஜூலை 31-ந் தேதியிட்டு ஸ்ரீமான் ஏ. கிருஷ்ணமூர்த்தியும் ஆக. 6-ந் தேதியிட்டு டாக்டர் ராஜனும் எழுதிய கடிதங்களும் இது சம்பந்தமான மற்றகடிதங்களும் தந்திகளும் படிக்கப்பட்டன.

இப்போதைய நிலைமையை உத்தேசித்து, தலைவர் பதவிக்கு அபேட்சகரைத் தேர்ந்தெடுக்க ஸ்தல காங்கிரஸ் கட்சி கூட வேண்டிய அவசியமில்லையெனத் தீர்மானிக்கப்படுகிறது. கட்சியில் பெரும் பான்மையோர் ஸ்ரீமான் தேவர் அபேட்சையை யாதரிப்பார்களென்று விசாரணையிலிருந்து தெரிகிறது. ஆகவே இக்கமிட்டியார் ஸ்ரீமான் தேவரை அபேட்சகராக நிறுத்துகிறார்கள். அவரையே ஒருமுகமாக ஆதரிக்கும்படி காங்கிரஸ் கட்சி கேட்டுக் கொள்ளப்படுகிறது.

இந்தத் தீர்மானத்தையும், தம் கடமையையும் வாக்குறுதியையும் மீறி டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன் தாம் நிற்கா விட்டாலும் காங்கிரஸ் கமிட்டி அபேட்சகர் பெயருக்கெதிராக ஒருவர் பெயரைப் பிரேரித்தார். அவர் பிரேரித்த அபேட்சகர் ஜயித்தார். உத்தரவை மீறும்படி தூண்டப்பட்ட சில காங்கிரஸ் அங்கத்தினர்களும் காங்கிரஸில் சேராத அங்கத்தினர்களும் அவரை யாதரித்தனர். இதன் பிறகு நடந்த சம்பவங்கள் அகில இந்திய காங்கிரஸ் காரியக் கமிட்டியின் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டன. டாக்டர் ராஜன் நடத்தையைக் கண்டித்து ஆக 20ந் தேதியன்று அவர்கள் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றினார்கள்.

ஒழுங்குமீறி நடந்ததற்குக் காரணம் காட்டும்படி ஆக 15ந் தேதியன்று கீழ்க்கண்டவர்களுக்கு நோட்டீஸ் கொடுக்கப்பட்டது. டாக்டர் ராஜன், ஜனாப் ஏ. கே. ஷெரிபுதீன், ஸ்ரீமான்கள் யு. ராமசாமி அய்யர், டி. ஆர். கோபாலராவ், லூர்துசாமி, பொன்னுசாமி முதலியார், பொன்னுசாமி செட்டியார், பிச்சையா பிள்ளை, டி. வி. எஸ். சாஸ்திரி, டபிள்யூ. பொன்னையா பிள்ளை.



டாக்டர் ராஜன், டாக்டர் சாஸ்திரி, ஸ்ரீமான்கள் கோபால ராவ், பொன்னுசாமி முதலியார், பொன்னுசாமி செட்டியார், பிச்சை பிள்ளை, பொன்னையா பிள்ளை, லூர்த்துசாமி, வி. ராமசாமி அய்யர் ஆகியோரிடமிருந்து பதில்கள் வந்தன. ஜனாப் ஏ. கே. ஷெரிபுதீன் சமாதானமெதுவும் சொல்லவில்லை. டாக்டர் டி. வி. எஸ். சாஸ்திரியும், ஸ்ரீமான் தேவரும் இக்கூட்டத்திற்கு வந்திருந்து தங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவித்தார்கள். டாக்டர் ராஜனும் அவர்களுடன் சேர்ந்த மற்றவர்களும் செய்த காரியம் வெறுக்கத்தகுந்தது. இதனால் காங்கிரஸின் கௌரவத்திற்கும் வலிமைக்கும் ஹானியேற்பட்டு விட்டது. அவர்களுக்குக் காங்கிரஸ் கமிட்டி உத்தரவில் ஆக்ஷேபமேதாகிலுமிருக்குமாயின் நகர சபையில் தங்கள் ஸ்தானங்களை ராஜிநாமாச் செய்திருக்க வேண்டும். காங்கிரஸ் பெயரால் ஜயம் பெற்றுவிட்டு மாகாண காங்கிரஸ் கமிட்டி யுத்தரவை நிராகரிக்க அவர்களுக்கு உரிமையில்லை.

டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன் நகர சபை அங்கத்தினர் பதவியை ஏற்கெனவே ராஜிநாமாச் செய்துவிட்டார். இந்தியா சட்டசபையின் ராஜிநாமாவை அகில இந்திய காங்கிரஸ் பார்லிமெண்டரி கமிட்டியார் பைசல் செய்ய வேண்டும். அவர் விஷயத்தில் எவ்வித நடவடிக்கையும் அவசியமில்லை. ஒழுங்கீனத்திற்கு மற்ற மெம்பர்கள் கூறியுள்ள சமாதானம் திருப்திகாமானதாகவில்லை. வாக்குறுதியை மீறி நடந்ததற்காகக் கீழ்கண்டவர்கள் நகர சபையிலிருந்து ராஜிநாமாச் செய்ய வேண்டுமென்று கமிட்டி கேட்டுக் கொள்ளுகிறது.

ஜனாப் ஏ. கே. ஷெரிபுதீன் ஸ்ரீமான்கள் யு. ராமசாமி அய்யர் டி. கோபாராவ், லூர்துசாமி, பொன்னுசாமி முதலியார், பொன்னுசாமி செட்டியார், பிச்சையா பிள்ளை, டி. வி. எஸ். சாஸ்திரி, பொன்னையா பிள்ளை.

தங்கள் தவறைபற்றி, இவர்கள் நகர சபையிலிருந்து ராஜிநாமாச் செய்து பொதுவாழ்க்கையின் உயர்வைக் காப்பாற்றுவார்களென்று எதிர் பார்க்கப்படுகிறது.

இத்தீர்மானத்தை சம்பந்தப்பட்டவர்களுக்கும், காங்கிரஸ் மாகாணத்தலைவருக்கும் அகில இந்திய காங்கிரஸ் பார்லிமெண்டரி கமிட்டிக்கும் அனுப்புவதென்று தீர்மானிக்கப்படுகிறது.

# நமது மகளிர் கல்வி

## கலைமகள் கல்லூரி

(திரு. கே. ஜி. செட்டியார்)

"தனவணிக சமூகம் வாழவேண்டும்; அறிவு நிறைந்த செல்வஞ் செழித்துச் சிறந்தோங்க வேண்டும்; பெண்ணினம் அறியாமை இருளை அகற்றவேண்டும்; ஆண்களோடு பெண்களும் அறிவு பெற்றுச் சமநிலை எய்தவேண்டும்" என்று நாம் நாளோயாது எழுதியும் பேசியும் வருகின்றோம்.

நம் சமூக வளர்ச்சியின் ஆக்க வேலையில் ஈடுபட்டோர் மிகக் குறைவு. அதிலும் பெண் பாலார்க்குக் கல்விப் பயிற்சி கொடுப்பதன் மூலம் அறிவை வளர்க்க முற்பட்டோர் மிக மிகக் குறைவு. செல்வம் செழித்த செட்டிமார் நாட்டில் பெண் கல்விக்கென ஊருக்கொரு கலாசாலைகூட இல்லை. அப்படி ஏற்பட்ட ஒரு சில கலாசாலைகளிலும் பூர்ணமான கல்வி கொடுக்கப்பெறவில்லை. எழுத்தை மட்டும் கற்பித்து விடுவது கல்வியாக மாட்டாது.

குழந்தைகட்கு மிகவும் இன்றியமையாது வேண்டப்படுவது உடல் நலம்; காலப்படி உணவு; பருவத்திற்கேற்ற நல்ல தோழர்கள்; அதன் பிறகேதான் கல்வி.

கல்வி பயிற்றுவிப்பதன் நோக்கம் கேவலம் எழுதப்படிக்கத் தெரிவதற்கு மட்டுமல்ல! ஆனால், ஒழுக்கம், அன்பு முதலியன வளரவேண்டும்; உண்மை உயரவேண்டும்; தன்னாடு, தன்மொழி என்ற பற்று மிகவேண்டும். வாழு முறைமை அறியவேண்டும்.

இப்படிப்பட்ட நன்னோக்கத்துடன் செட்டிமார் நாட்டில் எங்காவது ஒரு பள்ளி உண்டா? இல்லை. ஏன்? செட்டிமார் நாட்டில் செல்வம் இல்லையா? அல்லது செல்வமுள்ள தர்மவான்கள் இல்லையா? இல்லையில்லை. சிறந்த செல்வர்களும் நிறைந்த தர்மவான்களும் இருக்கின்றார்கள். எண்ணரும் பொருட் செலவில் எத்தனையோ ஆலயங்கள், அறச் சத்திரங்கள், பாடசாலைகள், பசுமடங்கள், நந்தவனங்கள் இன்றும் சிறந்த முறையில் செட்டிமார்களால் நடைபெற்று வருகின்றன.

அவை எல்லாம் பொருள் உள்ள புண்ணியவான் நினைத்த அளவில் உருவாகி விடக்கூடும். ஆனால், சிறந்த முறையில் ஒரு கல்லூரி ஏற்பட்டால் அதற்கும் பணம் வேண்டுவது அவஸ்யம்தான். ஆனால் அதனினும் மிக அவஸ்யம் தன்னலமற்ற ஒழுக்கமுள்ள—நேர்மையுள்ள—சிறந்த ஒரு அமைப்பாளர். அவர் அக் கல்லூரிக்காகச் சர்வத்தையும் தியாகம் செய்யக்கூடியவராய் இருக்கவேண்டும். அப்படித் தகுதிவாய்ந்த ஒருவரின்றி எத்தனைக் கோடி பொன் இருப்பினும் இம்மியும் பயனில்லை.

அத்தகைய ஒருவரை நமது சமூகம் எண்ணரு நாட்களாய் எதிர்நோக்கிக் கொண்டிருந்தது. இறையருளால் இன்று நம்மிடம் ஒரு சிறந்த மெய்யன்பர் வலிய வந்து சிக்கிக்கொண்டு விட்டார். அவர்தான் கொப்பனாபட்டி அ. மெய்யப்ப செட்டியார். கல்விக் கழக அனுபவமும், உண்மையிலேயே கல்விக்குத் தொண்டு புரிய வேண்டுமென்ற மெய்யன்புடன் கூடிய ஆர்வமும் உடையவர். கம்பைக் கல்வி நிலையத்தில் ஊதியம் பெறாமல் அமைச்சராயிருந்து பணியாற்றிய நல்லன்பர்.

அவர் நம் சிறுமிகளின் நலன் கருதி இத்தகு ஸ்தாபனத்தின் அவஸ்யத்தைப்பற்றிப் பலமுறை எழுதியும் பேசியும் வந்தார். யாரும் முன் வந்தாரில்லை. எனவே அவர் அயர்ந்து போகாமல் தாமே முன்னின்று "கலைமகள் கல்லூரி" என்னும் பெயருடன் கொப்பனாபட்டியில் சிறந்த ஒரு ஸ்தாபனத்தை 1-11-35-ல் ஏழு மாணவியர்களுடன் தொடங்கினார். குறைந்த இக்காலத்திற்குள் இன்று அங்கு எண்பத்தொன்பது சிறுமியர்கள் கல்வி பயில்கின்றார்கள். இன்னும் பல குழந்தைகளை அனுப்புதற்கு தாய்தந்தையர்கள் தயாராயிருக்கின்றார்கள். ஆனால் தற்பொழுதங்குள்ள இடம் மிகக் குறைவு; எனவே தம் கையிலிருந்தே பணம் போட்டு சுமார் இரண்டு ஏகர் உள்ள இடத்தை வாங்கிக் கம்பவுண்டு செய்கின்றார்கள். அங்கு குழந்தைகள் வசி

வதற்கும், பயில்வதற்கும் ஆசிரியர்களிருப்பதற்கும் கட்டிடங்கள் கட்ட வேண்டும். இன்றேல் இனி மேற்பட வரும் குழந்தைகட்கு "இடமில்லை" என்றே கூற வேண்டியிருக்கும்.

அவர்கள் பெரும் பணக்காரராய் இருப்பின் தாமாகவே அனைத்தையும் செய்யக் கூடிய ஆர்வம் உள்ளவர் தான்.

பிற பகுதிகளில் உள்ள கல்வி ஸ்தாபனங்கட்கு, கணக்கில்லாத பெரும் பொருளை வழங்கிய வள்ளல்கள் உள்ள நமது சமூகம் நம் பகுதியில் நம் சிறுமியர் நலன் கருதி நடத்தப்படும் இக் கல்லூரிக்கு ஆதரவு கொடுப்பார்கள் என்பதில் எனக்கு ஐயமில்லை. ஏன்? இன்று எங்கும் சென்று நன்கொடை கேட்கும் முன்னதாகவே ஒரு அன்பர் ரூபாய் ஆயிரம் அனுப்பியுள்ளாராம். பிறிதொரு அன்பர் ஐந்நூறு ரூபாய் அனுப்புவதாய் எழுதி இருக்கின்றாராம். எனவே நமது சமூகப் புண்ணியவான்களின் நற்பொருள் இதற்குத் தாராளமாய் வழங்கப் பெறும் என்று நம்பச் சந்தேகம் என்ன?

இன்று நம் சமூகத்திற்கு இதைவிட தேவையானது வேறென்றுண்டா என்று என்னால் கூற முடியாது. எல்லாப் பெரியர்களும் அப்படியே தான் கருதுவார்கள் என்பதில் எனக்குச் சந்தேகமே இல்லை.

இக் கல்லூரியின் பாடம் முதலியவற்றை நிர்ணயம் செய்வதற்கு ஒரு கலைக்கழகம் (Academic Council) அமைக்கப் பெற்றுள்ளது. அதில் நல்லப் பேரறிஞரும் அண்ணாமலை சர்வ கலாசாலை விரிவுரையாளருமான இருமொழிப் புலவர் பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரவர்களும், அண்ணாமலை சர்வ கலாசாலைத் தமிழ்ப் போராசிரியரும் வழக்கறிஞருமான திரு. எஸ். சோமசுந்தர பாரதியார் அவர்களும் அங்கம் வகிக்கின்றார்கள்.

எல்லாவகையாலும் சிறந்து விளங்கும் இக்கல்லூரிக்கு எந்தப் புண்ணியவான்களின் பொருள் சேரப் போகின்றதோ-இறைவனே யறிவான்! ஆனால் இது போன்ற சிறந்த பயனுள்ள தர்மத்தைச் செய்யும் புண்ணியவான்கள் தான் உண்மையிலேயே பொருள் பெற்ற பேற்றைப் பெறுவர் என்பது முக்காலும் சத்தியம்.

நினைத்தால் தாமாகவே செய்யக் கூடிய எண்ணற்ற பெருஞ் செல்வர்களைக் கொண்டுள்ள நம் சமூகத்தில் நம் சமூக வளர்ச்சி கருதி இதைத் தோற்றுவித்த அன்பர் எதிர்பார்ப்பது என்ன? பயிலும் மாணாக்கியர்கள் வசிப்பதற்கும், கற்பதற்கும், தேவையான சாதாரணக் கட்டிடங்களே!

இதை ஒருவரோ அல்லது சிலர் சேர்ந்தோ எளிதாய் நிறைவு செய்யலாம். செல்வமுடையவர் கவனம் செலுத்த வேண்டும். அவ்வளவுதான். இதையும் செய்யாமல் நாம் நம் சமூக வளர்ச்சிக்கு எதைதான் சாதிக்கப் போகின்றோம்.

ஒரு ராமநாதன் ஸ்தாபித்த கலாசாலை இலங்கையில் எண்ணற்ற சரஸ்வதிகளை உற்பத்தி செய்து வருகின்றது. ஒரு பச்சையப்பன் கல்வி நிலையம் எத்தனையோ ஆயிரம் மக்கட்கு கல்வியை அளித்து வருகின்றது. ஒரு ராஜா அண்ணாமலையின் சர்வ கலாசாலை இன்று தமிழ் நாட்டில் தமிழ்க் கலாசாலையாய் மிளிர்கின்றது.

அது போன்று நம் நாட்டில் செல்லச் சிறுமியர்கட்காக ஒரு சிறந்த ஸ்தாபனம் எப்பொழுது உண்டாகும் என்று நமது சமூகம் எதிர்பார்த்துக் கொண்டிருந்தது. இன்று அன்பர் மெய்யப்ப செட்டியார் இப்பணியில் இறங்கி விட்டார்.

அதற்கு ஆக்கம் தர செட்டிமார் செல்வர்கள் முந்திக் கொள்ள வேண்டும்.

---

## கொப்பனுபட்டி
### கலைமகள் கல்லூரியில்
### ஓர் கூட்டம்

இக் கல்லூரியில் 29—8—36 புதன் கிழமை மாலை 4 மணிக்கு ஓர் கூட்டம் நடைபெற்றது. தலைமை ஆசிரியர் ரெ. ராமமூர்த்தி ஐயர் தலைமை பூண்டு முன்னுரை நிகழ்த்திய பின்னர், கொத்தமங்கலம் திருவாளர் லெ. நடேசன் செட்டியார் "நான் கண்ட ஜப்பான்" என்னும் பொருள் பற்றிப் பேசினார். இதனை அடுத்து காரைக்குடி திருவாளர் சா. கணேசன் செட்டியார் "பெண் கல்வி" என்னும் பொருள் பற்றி விரிவுரையாற்றினார். கல்லூரித் தலைவர் திருவாளர் அ. மெய்யப்ப செட்டியார் எல்லார்க்கும் நன்றி பாராட்டுரை நல்கினர்.

---

## இராயவரம்
### விவேகானந்த வாசகசாலையின் மாதாந்தப் போதுக்கூட்டம்

மேற்படி கூட்டம் வாசகசாலைக் கட்டிடத்தில் மாலை 4-45 மணிக்கு காரைக்குடி சா. கணேசன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. காரியதரிசியால் தலைவரவர்கட்கு மாலையணிவிக்கப்பெற்றது. கூட்டத்திற்கு சுமார் 100 ஜனங்கட்கு விஜயஞ் செய்திருந்தனர். ஹிந்தி கற்றுக்கொள்ள வேண்டியதின் அவசியம்பற்றி R. ஸ்ரீநிவாசன் அவர்களும், தமிழரும்—தமிழும் என்பது பற்றி K. குப்பலிங்கம் அவர்களும் செட்டியார்களும்—சிக்கனமும் எனும் விஷயம்பற்றி கு. முத்தையா அவர்களும் பேசினார்கள்.

---

## ஒ. சிறுவயல்
### போதுக் கூட்டம்

14—8—36 மாலை 6-30 மணிக்கு இவ்வூர் தேசிய வாலிபர் சங்க ஆதரவில் குன்றக்குடி வாலிபர்கள் தேசிய கீதங்களுடன் ஊர்வலம் வந்து அலவாக்கோட்டை ஸ்ரீ பி. நா. செ. விசாலாக்ஷி அம்மையாரை வரவேற்று இவ்வூர் கமலா நேரு சவுக்கத்தில் ஸ்ரீமான் AL. RM. சேதுராமன் அவர்கள் தலைமையில் காங்கிரஸ் பொதுக் கூட்டம் நடந்தது. திருவாளர்களான தேவகோட்டை மீனாட்சி சுந்தரம் பிள்ளை, பிள்ளையார்பட்டி கடலை முத்து பிள்ளை, காரைக்குடி தேசிய வாலிப சங்க தலைவர் உன்னி கிருஷ்ணன், குன்றக்குடி வாலிப சங்க காரியதரிசி சுமு. முத்துராமன் இவர்கள் பேசினர். கிருகட்டல்பட்டி திரு. குப்பான் அவர்களால் சில தேசிய கீதம் பாடப்பட்டது. ஸ்ரீமதி விசாலாக்ஷி அம்மையார் சுமார் ஒன்றரை மணி நேரம் காங்கிரசும் நமது கடமையும் என்பது பற்றி பேசினார்.

---



காங்கிரசைப் பற்றி

# பழைய நினைவுகள்

1905-ல் வங்காள பிரிவினையை தடைசெய்ய தேசிய விரதமொன்று நடந்தது. அக்டோபர் 16-ந் தேதி வங்காள தேசத்தார் அனைவரும் ஒருவர் தவறாமல் அதிகாலையில் பாதரட்சை யில்லாமலும், உடம்பில் சட்டையில்லாமலும், கூட்டம் கூட்டமாக மந்திரமோ தேசிய கீதமோ ஓதிக்கொண்டு ஊர்வலமாக பக்கத்து குளம் குட்டைகட்கு சென்று நீர்மூழ்கி 'வங்காளிகள் அனைவரும் ஒருவரே. அவரை யாராலும் பிரிக்கமுடியாது. வங்காளபிரிவினை இருக்கும் வரை ஆங்கிலச் சாமானை கையாலும் தொடுவதில்லை' எனக்கூறி ஒருவருக்கொருவர் கையில் ரக்ஷாபந்தனம் கட்டிக் கொண்டார்கள். பின் ஊர்வலமாக வீடு திரும்பி அன்று முழுதும் பட்டினியாகக் கிடந்தார்கள். கடைகளெல்லாம் மூடப்பட்டன. வியாபாரம் தடைப்பட்டது. ஊர் காடுபோல் தோன்றியது.

லார்டு கர்சன் கீழ்நாடுகளில் சுற்றுப் பிரயாணம் செய்தபோது வயதை பொய்யாக உயர்த்திச் சொன்னாராம். அதனைக் கண்டுபிடித்து அமிர்த பஜார் பத்திரிகை கேலி செய்தது.

* * *

கர்சன் காலத்தில் அடக்கு முறை தாண்டவமாடியது. வந்தேமாதரம் என்று கூவினால் தண்டனை கொடுக்கப்பட்டது. மாணவர் மீதும் அடக்கு முறை பாய்ந்தது. அப்போதுதான் தூத்துக்குடி முதலிய விடங்களில் 'சுதேசி கலகம்' தோன்றலாயிற்று.

* * *

சர்க்காரிடம் விண்ணப்பம் போட்டு சிறிது சிறிதாக சீர்திருத்தம் வாங்க வேண்டுமென்று கூறுவாரும், சுயராஜ்யம், சுதேசியம், பஹிஷ்காரம், தேசியக்கல்வி போன்ற முறைகளால் சீர்திருத்தம் எய்த முயன்றவர்களுமாகிய இரு கோஷ்டியார் 1904 முதல் சற்று வேற்றுமைப்படலாயினர். இது 1906ல் சூரத் காங்கிரசில் வலுப்பட்டது. வலுப்பட்டு அடிதடியைக்கூட நெருங்கலாகி காங்கிரஸ் இரண்டாக பிளவுபட்டது. பிளவுபட்ட இரு குழுவில் தீவிரமான கொள்கை பேசி நின்றவர்கள் தீவிரவாதிகள் என்றும், ஏனையோர் மிதவாதிகள் என்றும் வழங்கப்பட்டனர். தீவிரவாதிகளின் தலைவர் திலகர். அரவிந்த கோஷ், விபின சந்திரபாலர், மோதிலால் கோஷ், அசுவினி குமார தத்தர், சுப்பிரமண்ய பாரதி, வ. உ. சிதம்பரம் பிள்ளை, சுரேந்திரநாத் ஆர்யா ஆகியோர் திலகரின் சிஷ்யருள் சிலர்.

* * *

1906-ல் அகில இந்திய முஸ்லிம் லீக் ஏற்பட்டது. அதன் நோக்கம்: "முகம்மதியருக்குள் ராஜபக்தியை வளர்த்தல்; அரசாங்கம் செய்யும் காரியங்களில் தப்பு அபிப்பிராயம் ஏற்படாமல் பாதுகாத்தல்; முகம்மதியரின் சொத்து, சுதந்திரங்களுக்கு யாதொரு பங்கமும் நேராமல் பார்த்துக் கொள்ளுதல்; முகம்மதியரின் ஆசாபாசங்களை நிதானமான வார்த்தையில் அரசாங்கத்துக்கு எடுத்துச் சொல்லுதல், முகம்மதியருக்கும் இதர வகுப்பினருக்கும் கூடுமானவரையில் சமரசம் உண்டு பண்ணுதல்" என்பனவாம்.




* * *

அவ்வருடம் மகமதியரின் ஆங்கில படிப்பை உயர்த்த வேண்டி அலிகாரில் ஒரு கலாசாலை நிறுவப்பட்டது. அதனை நிறுவியவர் சர் சையத் அமதுகான்.

* * *

1908-ல் சென்னை மௌண்ட்ரோட் எல்பின்ஸ்டன் தோட்டத்தில் மிதவாதக் காங்கிரஸ் நடைபெற்றது. டாக்டர் ராஷ்பிகாரி கோஷ் தலைமைவகித்தார்.

* * *

கோவா பிரதிநிதி யொருவர் போர்த்துகீசியச் சட்ட சபையில் அங்கம் பெற்றிருக்கிறார்; புதுச்சேரி பிரதிநிதி யொருவர் பிரெஞ்சு சட்ட சபையில் அங்கம் பெற்றிருக்கிறார்.

* * *

காங்கிரசின் 25-வது வருடக்கொண்டாட்டம் 1910-ல் அலகாபாத்தில் நடைபெற்றது. மகாசபையின் வயதைக் காண்பிக்கும் முறையில் பந்தலுக்கு 25 வாயில் படிகளை அமைத்தனர்.

* * *

1911ல் ஜனவரி 5ம் தேதி 15 பேர் அடங்கிய ஒரு காங்கிரஸ் தூதுக் கோஷ்டி வைஸ்ராய் லார்டு ஹார்டிஞ்சைக் கண்டு காங்கிரசின் கருத்து, கொள்கைகளை கூறினர். அப்படி சொன்ன பத்திரமொன்றை பட்டில் அச்சிட்டு தந்த மூலாம் பூசிய வெள்ளிப்பேழையில் ராஜபிரதிநிதியிடம் சமர்ப்பித்தனர்.

* * *

1912ம் வருடம் பங்கிபூர் காங்கிரஸ் நடைபெறு முன்பு வைஸ்ராய் லார்டு ஹார்டிஞ்சும் மனைவியும் டில்லியில் பட்டணப் பிரவேசம் செய்தபொழுது ஒரு வெடிகுண்டு விழுந்து ராஜபிரதிநிதி காயமடைந்தார். மனைவியார் மயக்கம் கொண்டார். இதனை காங்கிரஸ் கண்டித்தது.

* * *

காசியில் 1913ம் ஆண்டு காங்கிரஸ் நடைபெற்றபோது சென்னைவாசியான நவாப் சையத் மகமது தலைமை வகித்தார். இவர் திப்பு சுல்தானின் வம்சத்தைச் சேர்ந்தவர்.

1914ல் (மகாயுத்த ஆரம்ப சமயம்) சென்னையில் தேசிய மகா சபை நடைபெற்ற போது கவர்னர் லார்டு பெண்ட்லண்டு சபைக்கு விஜயம் செய்தார். சபையார் எழுந்து நின்று அவரை வரவேற்றனர்.

* * *

1915ம் வருடம் பம்பாய் காங்கிரஸ் நடைபெற்றபோது சர் சத்தியேந்திர பிரசன்ன சின்ஹா தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவரை சர்க்கார், ராஜப்பிரதிநிதியின் நிர்வாக சபையில் அங்கத்தினராக்கினர். சர். சின்ஹா அப் பதவியை உதறித்தள்ளி விட்டார்.

* * *

அப் பம்பாய் காங்கிரசுக்கு 2250 பிரதிநிதிகள் வந்தனர். இதற்கு முன் எந்த வருடமும் அவ்வளவு பிரதிநிதிகள் வந்ததில்லை.

* * *

1916ல் திலகர் பெருமானின் 60வது வயது நிறைவேறியது. 8 ஆயிரம் மக்கள் கூடி வாழ்த்தினர். ஒரு லட்ச ரூபாய் காணிக்கை செலுத்தினர். திலகர் அத் தொகையை தேச சேவைக்கு எழுதி வைத்தார்.

* * *

1916ம் வருடத்தில் லட்சுமணபுரியில் காங்கிரஸ் கூடிய போது சூரத்தில் துண்டுபட்ட மிதவாதிகளும், முஸ்லிம் லீகும் காங்கிரசுடன் ஐக்கியப்பட்டனர்.

* * *

1917 ஜுலையில் பெசண்டை அடக்கக் கருதி சென்னை கவர்னர் பெண்ட்லந்து 'இந்தியாவைவிட்டுப் போக வேண்டும்; இன்றேல் பந்தோபஸ்தில் வைக்க நேரும்' என்றார். பெசண்ட் கீழ்ப்படியவில்லை. உடன் அவரை திரு. அருண்டேல், வாடியா ஆகியவர்களுடன் சிறையில் போட்டனர்.

* * *

போட்டதும் டாக்டர் எஸ். சுப்ரமண்ய ஐயர் தம் தள்ளாத வயதில், ஹோம் ரூல் கிளர்ச்சியையும் அன்னி பெசண்டின் கைதுப் பற்றியும் அமெரிக்க தலைவர் லார்டு வில்சனுக்கு கடிதமெழுதினார்.

* * *

1917-ல் மாண்டேகு இந்திய மந்திரியானவுடன் ஆகஸ்டு மாதம் 20-ந்தேதி ஒரு விளம்பரம் பிறந்தது. அதன் சாரம் :—

"பிரிட்டிஷ் குடை நிழலுக்கு உட்பட்டு இந்தியாவிலே ஜனங்களுக்குப் பொறுப்பான ஆட்சியை ஏற்படுத்த வேண்டி, நிர்வாகத்தின் ஒவ்வொரு துறையிலும் இந்தியரை வரவர அதிகமாகக் கலந்துகொள்ள வேண்டுமென்பதும், சுயாராஜ்யத்திற்கு அனுகுணமான ஜன சபைகளை இந்தியாவில் படிப்படியாக அபிவிருத்தி செய்ய வேண்டும் என்பதும் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டின் கோட்பாடு. இதற்கு இந்தியா கவர்ன்மெண்டும் சம்மதித்து இருக்கிறது. அக் கோட்பாட்டின்படி எவ்வளவு சீக்கிரம் தகுந்த அளவு திருத்தங்களை உண்டுபண்ண வேண்டுமோ அவ்வளவு சீக்கிரத்தில் திருத்தங்களைப் படிப்படியாகச் செய்துகொண்டு போக வேண்டுமென்பது தீர்மானமாகி யிருக்கிறது. இதற்காக இந்தியாவிலுள்ள அதிகாரிகளையும் ஜனப் பிரதிநிதிகளையும், இதரர்களையும் நேரில் கலந்து பேச இந்தியாவிற்கு இந்தியா மந்திரியை அனுப்புவதாகவும் தீர்மானமாகி விட்டது"

விளம்பரம் வெளியானதும் ஸ்ரீ பெசண்டை விடுதலை செய்தனர்.

* * *


**ஜோதிஷ மகுட வர்த்தனர்.**



இந்து மன்னர் சமஸ்தான 25-வது தலைமுறை ஜோதிஷர். பீமகவி, சுகர்புஜண்டர், சாஸ்திர நிபுணர். ஜோதிஷத்தில் 'உலக சிரேஷ்டர்' என மெடல்கள் பெற்றவர். லக்கின நக்ஷத்திர ஸ்புடஞ் செய்து பொதுப்பலன் ரூ 1. ஒரு தெசைக்கு புத்தி பலன் ரூ 2. அஷ்டவர்க்கம் ஆயுள்வரை புத்தி பலன் ரூ. 7. (ஜாதக குறிப்பு மூன் ரூ. 4. தேவை) 1-வருடம் மாதா மாதப் பலன் ரூ. 1-8-0. கேள்வி 6-க்கு ரூ. 1. ஜாதகம் or எழுதும் நேரம் தேவை.

புரபஸர். N. V. சுப்பிரமணியம்,
நெ. 5, ஜோதிஷ ஆசிரமம்,
வாலாஜாபாத் S. I. R. சென்னை.


கல்கத்தா காங்கிரசில் அன்னி பெசண்ட் தலைமை தாங்கினார். அவரை சர்க்கார் சிறைப்படுத்தி வைத்திருந்ததால் அரசாங்கத்துக்கு ஓர் பாடம் கற்பிக்க வேண்டுமென்றே தேசமக்கள் அவரை தலைவராக்கினர்.

* * *

1917ம் வருஷம் 26ந்-தேதி கல்கத்தாவில் 32வது காங்கிரஸ் நடைபெற்றது. அச்சபையின் ஆரம்பத்தில் உலக மகாகவி தாகூர் காங்கிரசை வாழ்த்தியும் தொழுதும் ஒரு கவி பாடி வாசித்தார்.

* * *

1921ம் வருடம் நவம்பர் மாதம் 17ந்-தேதி வேல்ஸ் இளவரசர் பம்பாய் வந்திறங்கினார். அதற்கு முன் வைசிராய் லார்டு ரீடிங் காங்கிரசுடன் சமரஸம் செய்து கொள்ள முயன்றார். பண்டித மாளவியா காந்திஜிக்கும் ராஜப்பிரதிநிதிக்குமிடையே தூது போனார். காந்திஜீ சிறையில் கிடந்த அலிசகோதரர்களை விடுதலை செய்து, மாகாண சுயாட்சி தருவதாக வாக்களித்தால் சமரஸம் பேசலாமென்றனர்.

* * *

1922ம் வருடத்தில் நாகபுரி கொடிப் போராட்டம் நடைபெற்றது. ஜம்னாலால் பஜாஜ் உன்பட ஆயிரம் பேருக்கு மேல் சிறை அதில் சென்றனர்.

* * *

1922ம் வருடத் தொடக்கத்தில் சட்ட சபையில் புகுந்தும் போராட வேண்டுமென்று தாஸ் கட்சியார் சொல்ல, சுயராஜ்ய கட்சி ஏற்பட்டது. அதுகாலை சட்ட சபைப் பிரவேசம் வேண்டாமென்ற கூட்டத்தார் வைதீக ஒத்துழையாதார் அல்லது மாறுதல் வேண்டாதார் என்று அழைக்கப்பட்டார்கள்.

* * *

இந்திய மந்திரியாக இருந்த லார்ட் பர்க்கன் ஹெட் 'இண்டலாக' இந்தியர்கட்கு, எல்லோரும் ஒப்பும்படியான ஒரு அரசியல் திட்டம் வரைய முடியுமாவென்று கேட்டதின் மேல் எல்லா கக்ஷியாரும் 1928ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் லக்னோ நகரில் கூடி, அரசியல் திட்டமொன்றை வரைந்தனர். அதற்கு 'நேரு திட்ட'மென்று பெயர். அதுவே குடியேற்ற நாட்டந்தஸ்துக் கோரிய திட்டம்.



# வியப்பும் திகைப்பும்.

## எவ்வுணவை உண்பது?

N. R.

உலகில் எக்காலத்தும் உடன்பாடும், எதிர்மறையும் உடன்றோன்றுதல் இயல்பாகவே இருக்கின்றது. பின் இதன் தன்மைகண்டு ஒரு வழிப்படுதலும் உண்டு. உண்மையறிந்து ஒரு வழிப்படாத உயர்ந்தாரும் இருக்கவே செய்கின்றனர். சென்ற சில வாரங்களாகச் சில செய்தித் தாட்களில் நூதன விஷயங்கள் வெளிவந்தன. அதுபற்றி யான் சாஸ்திர வல்லுநனும், அநுபவ ஆராய்ச்சியாளனும் அல்லனாயினும் கற்றார்பாற் கேட்ட கவினுடைப் பொருளாலும், புதினத் தாட்கள் படித்த சிற்றறிவாலும் அடைந்த கருத்தை வெளியிடலானேன்.

தேச வியல்பு சீர்குன்றியமையால் தேக வலியின்றிச் செவ்வியிலாய் மக்களனைவரும் உடலைப்பேண உறுதுணையாய உணவில் பேதம் தினையும் நினையாது, கண்டதைத் தின்று கஜம் போல் வாழ்கவென்றும், அதற்குச் சான்று உபநிடதமுரைத்த உத்தம ரிஷிகள் என்றும் அன்னார் மாட்டு மாமிசமும் மகிழ்ந்துண்டு மன்னுயிர்க்கிடமாம் மாமிசவுடலை வளர்த்தனரென்றும் ஓர் பெரியார் உயருபதேசம் உரைத்தருளினாராம். அவர் கூற்றைத் தழுவும் தகைசால் மக்கள் தாளுளராதலின் உவகையோடு உறுதியாய் உரைத்தனர் போலும்.

விஷயத்தைச் சிறிதாராய்வோம். உயிர்கள் உடலை ஓம்புதல் கடனே. அதற்கு உடலின் தன்மை உணவாம்; ஆதலின் உணவு உரியதாயிருத்தல் அவசியம். இவ்வுணவு, காலம் இடம் பொருள் உடல் நிலைகளுக்கேற்பவும் சாத்வீகமும் அறிவும் திண்மையும் பெருகும்படியும் இருத்தல் வேண்டும். இவ்வகையில் மரக்கறி யுணவே மாண்புடைத்தென்று கற்றோர் கூறுகின்றனர். மாமிசமே சிறந்த உணவெனக் கொள்ளும் மேலைநாட்டவர்களில் சில பெரியார்கள் மரக்கறி யுணவே சாலச் சிறந்ததென்று கூறுகின்றனரென அறிகின்றோம். அவர்கள் அநுபவத்தில் ஆராய்ந்தறிந்ததே யாகும். பலசாலிகளும் தாவர வுணவே தகுதியுடையதென்போர் பலர். மத ஸ்தாபகர்களும் கூட அறிவில் நம்மை ஒருபுடையொத்த விலங்கினம் முதலியவற்றை நீக்கி அசாப் பொருளாய காய் கனி கிழங்கு முதலியனவே உட்கொள்ளல் வேண்டும் எனப் பணித்துள்ளனர். மரக்கறியில் சத்தில்லாவிடின் மாமிசமுண்ணும் யோசனை கொள்ளலாம். தாவர வுணவே கிடைக்காத நாட்டிடைப் பிறந்தவர்களாயின் அங்கு இம்முறை தகுமெனக் கொள்ளினுமமையும். நமது சமயாச்சாரியர்கள் ஒருவன் உணவின்றி யுயிரிழப்பினும் கொலைத் தொழிலாலாய புலாலுண்ணல் அறவே நீக்கக் கடவன் என்று அருளியுள்ளார்கள். உலகத்திலே சீர்திருத்தம் செய்யக்கூடியதும், ஒருகாலத்தில் இருப்பதுவே எப்பொழுதும் நன்மை பயக்கக் கூடியதாய் இருப்பனவுமென இரு பகுதியுண்டு. எடுத்ததெல்லாம் சீர்திருத்தமென்று தமதிச்சையை இறைத்துவிடின் பொருந்தாது. உபநிடதத்தைச் செய்த ரிஷிகள் காலங் கடந்தவர்கள். அவர்களைச் சான்று பகர வேண்டுமென்பது கூட வேண்டா. இக்காலத்தில் உயர்ந்த செய்கையும் அறிவும் நல்லுபதேசமும் புரிபவர்களில் புலாலுண்பாரிலார்? அவர்களைக் கொண்டு சான்று கூறிவிடலாம். உணவு கிட்டாமல் நாயிறைச்சியைத் தின்னப் புகுந்தார் ஓர் ரிஷி. அதனைக் கண்ட தேவர்கள் நாடு செழிக்க அருள்புரிந்தனர் என்றும் நூல் கூறுகின்றதாகவும் அறிகின்றோம். உபநிடத முனிவர்கள் தின்றார்களென்பதை உண்மையாகக் கொள்ளின் இரண்டும் மாறுபட்டிருப்பதால் இருவர் கூற்றும் எத்தகையதெனக் கூர்ந்து நோக்குக. இனி உலகில் பெரும் பகுதியினர் புலாலுண்பதால் அவர்களோடு ஒன்றுபட்டு எல்லாரும் புலாலுணவு கொள்ள வேண்டுமெனின் புலாலுண்பார் மரக்கறி யுணவு கலப்பின்றி எக்காலும் மாமிசம் புசிப்பாரைக் காணுதல் அரிது. தாவர வுணவோ அவ்வண்ணமன்று. அன்றியும் வேதகால ரிஷிகள்போல் மனத் தூய்மை தானின்னார்க்குண்டா, எளிதில் கிட்டுமரி இன்னைமாக சிறார்களைச் செம்மைப்படுத்தும் செந்நெறிச் சாலையில், தமிழ்மொழிக் கனியாம் திருக்குறளைப் போற்றும் சிறார் கல்லூரியில் மனத்தூய்மையும், திண்மையும், வீரமும், ஈரமும், அறிவும் பெருக, கல்லூரியில் பெற்ற உபதேசத்தான் தங்கள் வழிவழி வருவாரும் நல்லுணவே கொண்டு, மங்கி வாழ வுபதேசம் புரியாத நன்மையைக் கூற வந்தவர்கள் இவ்வன்மையைக் கூறுவதை நோக்க வியப்பும் திகைப்பும் மிகவி வருகின்றன. மனம் பண்படுவதல்லது உணவு முதலிய மற்றவையான் மிகம் செறியாது. மனம் செவ்வைப்படின் அதற்கேற்ற மரக்கறி யுணவே மாணவும் பயக்கும் என்பது எளியேன் கருத்து. அறிவுசால் பெரியோர் அரிய கருத்தெதோ, சிறியேன் கட்டுரை செம்மையோ வழுவோ எம்போன்ற நவையுறுவினர்க்கு இருநிற வல்லாரும் இதன் இயல்பை விரித்து வியப்பையும் திகைப்பையும் விலக்குதல் கடனும்.

---

திபத் ஆடுகள் எல்லை தாண்டி இந்திய எல்லைக்கு வந்தனவாம். ஆதலால் பிரிட்டிஷார் ராணுவத்தை அனுப்பி திபத்தோடு சண்டை செய்தார்களாம்.

* * *

பிரேசிலில் ஒரு தவளையிருக்கிறது. இது மற்ற தவளைகளைப் போல் கத்துவதில்லை. நாயைப்போல் குரைக்கிறது; கடிக்கிறது.





ஜகத்ரக்ஷக
ஸ்ரீ ஷண்முக யந்திரம்
125,6600 ஜனங்கள் போற்றுவது
பரீக்ஷை வெற்றி, ஜீவன விருத்தி, சொற்பன மிரட்சி, சத்துரு அடக்கம், வழக்கு ஜெயம், புத்திர விருத்தி, குடும்ப ஒற்றுமை, நோய்பேய் ஒழிதல், யந்திரம் 1க்கு ரூ 2.
மாந்திரீக மகுத்துவ ஆபீஸ்,
வாலாஜாபாத், P.O, S.I.R. சென்னை.

வெள்ளித் திரைக்கு வந்து விட்டது!

சென்னை கிரௌன் டாக்கீஸில்

வெளிவரும் தேதியை எதிர்பாருங்கள்!

# பாமா பரிணயம்

சினிமா ராணி T. P. ராஜலெக்ஷ்மி

சிறுகளத்தூர் சாமா -

வித்வான் ஸ்ரீநிவாஸன் -

ராஜா M. G. தண்டபாணி -

முதலிய உயர்தர நடிகர் நடிக்கும்

உன்னத தமிழ்ப் பேசும் படம்

டைரக்ஷன்:

Y. V. ராவ்.

உயர்தர ஸீன் ஜோடிப்பு.
உன்னதப் படப்பிடிப்பு.
தெளிவான ஒலிப்பதிவு.
காதிற்கினிய கானங்கள்.
கண்களைக் கவரும் காட்சிகள். ரமணீயமான உடைகள். காதல், சோகம், ஹாஸ்யம், மயிர் சிலுக்கும் சண்டைகள், திடுக்கிடும் சம்பவங்கள், மங்களகரமான முடிவு உள்ளது.

எதிர்பாருங்கள்!

K. அஸ்வத்தம்மா முதலிய உயர்தர நடிகர்கள் தோன்றும்

பில்வமங்கள் அல்லது சிந்தாமணி

டைரக்ஷன் Y. V. ராவ்.

தயாராகி வருகிறது.

படம் வேண்டுவோர் எழுதுக:— ராயல் டாக்கி டிஸ்ட்ரிபியூடர்ஸ்,

120, தெற்கு மாசி வீதி :: மதுரை.



# ஜப்பான்—நெறி தவறா நாடு

சமீப காலத்தில் ஜப்பான் சென்று வந்த மைசூர் ஹைகோர்ட் நீதிபதி ஏ. எஸ். ஆர். சாரி என்பார் ஜப்பானைக் குறித்து ஆங்கிலத்தில் ஓர் கட்டுரை வரைந்துள்ளார். அக் கட்டுரையில் அவர் சித்தரித்துக் காட்டும் ஜப்பானியர் வாழ்க்கை நம்மவர்கள் கருத்தைக் கொள்ளை கொள்ளும் என்பதில் சந்தேகமில்லை. அவர் ஆங்கிலக் கட்டுரையின் மொழிபெயர்ப்பு வருமாறு:—

ஜப்பானைக் காண சென்ற நூறு பேர்களில் தொண்ணூற்றி ஒன்பதின்மர் ஜப்பானின் ஸன்பர்களாகவும், சிறப்பிப்பவர்களாகவுமே திரும்புவர்; இது மிகைபடக் கூறினதாகாது. அந்த தேசத்தில் ஏதோ ஆச்சரியமான விசேஷம் பொருந்தியிருக்கிறது. அத்தேசத்து மக்களின் குணவிசேஷங்களானது, அன்னியர்களுடைய கருத்தை ஈர்ப்பதோடு, அவர்களையும் அதற்கனுசரணையாக இருக்க ஆக்கிக் கொள்ளுகிறது.

என்னைப் பொறுத்த வரையில் இந்தியாவும் ஜப்பானும் நெருங்கிய சம்பந்தமுடையதாக இருக்க வேண்டுமென நான் கருதுகிறேன். புத்த பெருமானை ஈந்த இந்தியாவிடத்து ஜப்பானியர்கள் பெரிதும் மதிப்புடையவர்களாகவே இருக்கிறார்கள். தற்காலம் ஜப்பானியர்கள் இந்தியாவிடம் கொண்டிருக்கும் மதிப்பு பரிதாபகரமானதாக இருந்த போதிலும், ஜப்பானின் பண்புக்கு இந்தியா உயர்ந்த அளவில் கருவியாக இருந்திருக்கிறது.

கொளும்புவில் 'ஹாகுமாரு'(ஜப்பான் மாக்கலம்) எனும் மாக்கலத்தில் நாங்கள் காலெடுத்து வைத்தவுடனே ஜப்பானியர்களுடைய வாழ்க்கையை நோக்க ஆரம்பித்தோம். ஜப்பான் செல்லும் எல்லா பிரயாணிகளையும் ஜப்பான் மாக்கலத்திலேயே செல்லுமாறு விழைகிறேன். ஏனெனில் உலகத்திலுள்ள எந்த மாக்கலங்களுக்கும் அவைகள் இரண்டாந்தரமானதாக இல்லை. ஜப்பான் மாக்கலங்களில் இருந்தாலுமே சட்டப்படி ஜப்பான் பிரதேசத்தில் இருப்பதை ஒக்குமானாலும் வழியில் பல துறைமுகங்களைக் கடந்து கோபி துறைமுகத்தை கண்ணி நாங்கள் முதல் முதலாக ஜப்பான் மண்ணைத் தீண்டினோம். மரியாதை, உண்மை, எளிமை, சுறுசுறுப்பு ஆகிய நான்கு வார்த்தைகளாலுமே ஜப்பானியர்களின் தன்மையை எடுத்துக் காட்டக் கூடும். மிருகங்களிடத்து அன்பாய் இருக்கவேண்டு மென்று அவர்கள் கொண்டுள்ள மதம் அவர்களுக்கும் போதிக்கின்றது. அது சாட்டை இல்லாத தேசமென்பதையும், சாட்டையை அங்குள்ள கடை ஒன்றிலும் வாங்க முடியாதென்பதையும் வாசகர்கள் அறிவார்களானால் ஆச்சரியப்படத்தான் செய்வார்கள். வண்டியோட்டிகளும் எந்தக் காலத்திலும் சாட்டையை உபயோகிக்க மாட்டார்கள். குழந்தைகளைப் போன்றே மிருகங்களைப் பாமரிப்பதோடு, உண்மையில் அவர்கள் அதனுடன் பேசவும் செய்வார்கள். உழுவதற்கும், பளு இழுப்பதற்குமே அங்கு மிருகங்கள் உபயோகிக்கப்படுகின்றன. விரைவான போக்குவரத்துக்களெல்லாம் மோட்டாரினாலேயே நடைபெறுகின்றன. அனேகமாக அங்குள்ள ஒவ்வொரு வண்டிக்கும் நான்கு உருளைகள் இருக்கும். இடைவேளையில் மிருகங்களுக்குத் தாப்படுவதற்காக ஒவ்வொரு வண்டியிலும் 'ஓட்ஸ்' நிறைந்த மூட்டை ஒன்று இருக்கும். எல்லா மிருகங்களும் நன்கு வளர்க்கப்பட்டும், கொழுத்துமிருக்கும். அரை வயிற்றோடு வேதனைப் பட்டுக்கொண்டு எலும்புந் தோலுமாய் கிடக்கும் ஒரு குதிரையையோ, அல்லது ஒரு காளையையோ அங்கு ஒருவரும் காண முடியாது. 'அஹிம்ஸா' தத்துவம் இந்தியாவிலிருந்து ஜப்பானுக்குக் குடியேறினதாகவே நான் எண்ணுகிறேன். நெஞ்சை அள்ளும் கருணை நிறைந்த மனித செய்கை டோகியோ நகரில் நாங்கள் கண்டோம். ஒரு வண்டி நிறைய மரசிம்மைகளை இழுத்துக்கொண்டு போகும் பொழுது மழைப்பொழிய ஆரம்பித்து விட்டது. உடன் அவ்வண்டி ஓட்டி காலம் தாழ்த்தாமல் தனதுமேல் அங்கியைக் கழட்டி, தன்னை விட்டுவிட்டு வண்டி இழுத்துச்சென்ற குதிரைக்குப் போர்த்தினான். மிருகங்களிடத்து அன்பாக இருக்கவேண்டு மென்பது முதியோர்களுக்கும், இளைஞர்களுக்கும் கற்பிப்பதற்காக அங்கு ஒவ்வோர் ஆண்டும் 'மிருகங்கள் வாரம்' நடைபெறுகின்றன. அது, இங்கு இந்தியாவிலும் பின்பற்றுவதற்குள்ள ஓர் சரியான கருத்தாகும். 1868-லிருந்து மாட்டுக்கறி உபயோகிக்கப்படுவது ஜப்பானியர்களால் அறவே ஒழிக்கப்பட்டாகி விட்டது. இன்றும் அதன் விலையேற்றத்தினால் ஏதோ சிலருக்குத்தான் அது விருந்தாக இருந்து வருகிறது. மக்கள் தொகையிலும், மண் பரப்பிலும் ஜப்பானை ஒத்துள்ள சகல தேசங்களைக் காட்டிலும் ஜப்பான் முழுதிலும்தான் குறைவாக மாட்டுக்கறி உபயோகிக்கப்படுகிறது.

இயற்கையாலும், பழக்கத்தினாலும் ஜப்பானியர்கள் உலகத்திலேயே மரியாதையுடைய மக்களாக இருக்கிறார்கள். இதை மெய்ப்பிப்பதற்கு, மூனருக்குக் குறையாதவர்களைக் கண்டவிடத்து ஜப்பானியர்கள் தலை தாழ்த்து வதே போதியதாகும். உட்காருவதற்கான சாதனங்கள் மாத்திரம் அமைக்கப்பட்டுள்ள அதிக ஜனப்பெருக்கமுடைய புகை வண்டிகளில் பிரயாணிகள், ஆசனங்களில் படுத்துறங்குவதையும், நடுவழியில் ஏறும் பிரயாணிகள் தாங்கள் நின்றுகொண்டிருப்பதானாலும் உறங்குபவர்களுக்குத் தொல்லை கொடுக்காமலிருப்பதையும் நாங்கள் கண்டோம். எவ்விடத்தும் அதே மரியாதைதான். அங்கு எந்த வர்த்தக நிலையங்களுக்குள் சென்றபோதிலும்

முகமலர்ச்சியோடு வரவேற்கப்படுவதை நீங்கள் காண்பீர்கள். ஒன்றும் கொள்ளாமல் நீங்கள் திரும்பிவிட்ட போதிலும் அவ்வியாபாரிகளிடத்து எவ்வித கோபத்தையும், ஏமாற்றத்தையும் காணமுடியாது. ஆனால் அதற்கு பதிலாக, அந்தக் கடை முழுவதையுமே நீங்கள் வாங்கிவிட்டது போன்றே அந்த வியாபாரிகள் உங்களுக்கு வந்தனஞ் செலுத்துவார்கள். புகை வண்டிகளிலும், டிராம்களிலும், பஸ்களிலும், சிற்றுண்டி சாலைகளிலும் அதே மரியாதையையும், கருணையையும் காணக் கூடும்.

ஜப்பான் மொழி துர்அதிர்ஷ்டவசமாக எங்களுக்குப் போதிய அளவு தெரியாததினாலும், பெருமிதமான ஜப்பானியர்களுக்கு ஆங்கிலம் தெரியாததினாலும், எங்களுடைய தேவைகளையும், எண்ணங்களையும் அவர்களுக்கு உணர்த்துவது கடினமாக இருந்தது. டோகியோ நகரில் ஒரு நாள் இரவு நாங்கள் வழி தவறிவிட்டோம். அது சமயம் ஓர் ஜப்பானியர் எங்களுடன் இரண்டு மூன்று மைல் நடந்து வந்து எங்களை வீட்டினுள் விட்டு விட்டுச் சென்றார்.

இந்தியாவும், மற்ற நாடுகளும் தவறாக எண்ணிக் கொண்டிருப்பதற்குப் புறம்பாக, அவர்களுடைய சாதாரண வாழ்க்கைப் பாதையில் ஜப்பானியர்கள் உண்மையில் பற்றும், சமாதானத்தில் ஆர்வமும் உடையவர்களாக இருக்கிறார்கள். ஜப்பான், குற்றம் புரியாத ஓர் தனித்த தேசமென்று சொல்வதே பொருந்தும். ஒழுக்கம் தவறிப் போனது பற்றின வழக்குகளே அங்கு கிடையாது. ஆண்களைக் காட்டிலும் பெண்கள் உண்மை உள்ளவர்களாக இருக்கிறார்கள். ஜப்பான் பெண்களுக்கு வாழ்த்துக் கூறுவோம்! ஏன் (?) அவர்கள் தான் அத் தேசத்தை ஆக்கினவர்கள். ஏழு கோடி மக்கள் கூட்டம் உள்ள அங்கு ஒழுக்கம் தவறினவர்களும் இன்னும் பலவகைக் குற்றங்கள் புரிந்தவர்களாகவுஞ் சேர்த்து ஐயாயிரவர்களே ஆவர். அடுத்தடுத்து செய்த குற்றத்தையே செய்து கொண்டிருக்கும் குற்றவாளிகள் அங்கு பதினைந்தாயிரவர்களில் ஒருவரே யாவர்.

அதிகப்படியான ஜப்பானியர் வீடுகள் கடிதத்தாலும் கண்ணாடியாலும் சுவர் எழுப்பப்பட்டு, சாளரங்களும் கதவுகளும் வைக்கப்பட்டிருக்கும். சாளரங்களுக்கு இருப்புக் கம்பிகளோ கதவுகளுக்குப் பூட்டுகளோ கிடையாது. அப்படியிருந்தும் அங்கு கன்னம் வைப்பதோ (!) களவாடுவதோ மிகவும் குறைவாகும். டோகியோ நகரில் எங்களுடைய பொருட்களையெல்லாம் ஒரு வீட்டில் போட்டுவிட்டு, அதற்கு ஒரு வேலைக்காரனைக் காவல் வைக்காமலும், வீட்டைப் பூட்டாமலும் அத்தேசத்தின் உள்பாகங்களில் பல நாள் சுற்றி வந்தோம். நாங்கள் திரும்பி வந்து பார்த்த பொழுது, வைத்து விட்டுப் போன ஒரு பொருள் கூட தவறிப் போகாமல் இருக்கக் கண்டோம். புகை வண்டிகளிலுங் கூட நீங்கள் கேவலமாக அஜாக்ரதையினால் ஏதாவது பொருளை விட்டு விட்டு வருவீர்களேயானாலும், அதை ஒருவரும் களவாட மாட்டார்கள். அங்குள்ள எல்லா கடைகளிலும் பேரம் பேசும் வழக்கமே கிடையாது. மொழியையும், நாணய செலாவணி முறையையும், அறியாத வெளி நாட்டார்கள் நீங்கள் என்பதற்காக அல்லாமல் எல்லா பொருட்களின் விலையும் நேர்மையானதாக இருப்பதோடு திட்டமாகவும் இருக்கிறது. டிராம் வண்டிகளிலாகட்டும், புகை வண்டிகளிலாகட்டும் 'டிக்கெட்' பரிசோதகர்களே கிடையாது. தற்கால முறைக்கேற்ற வகையில் சிறைக் கூடங்களெல்லாம் அமைக்கப்பட்டிருக்கின்றன. அதன் நோக்கம், தனது பழைய குற்றத்திற்காக ஒரு குற்றவாளிக்குத் தண்டனை அளிப்பதாக இல்லாமல், அவனை சீர்திருத்தி ஓர் ஒழுங்கான பிரஜையாக மாற்றுவதேயாகும். டோகியோ நகரை அடுத்துள்ள கோசியூக் சிறையிலுள்ளவர்கள் தங்களுக்கென சொந்தத்தில் 'ஹிடோ' (மானுஷீகம்) எனும் பெயரிய உயர்ந்த பத்திரிகையொன்றை நடத்துகிறார்கள். அதற்கான கட்டுரைகளும் கைதிகளாலேயே எழுதப்படுகின்றன.

ஜப்பானியர்களுடைய பழக்கத்தில் செறிந்து கிடக்கும் எளிமையையே அடுத்தபடியாக நீங்கள் காணக்கூடும். அங்கு பெரிய பிரபுவுங்கூட சொந்தத்தில் 'கார்' வைத்திருக்க மாட்டார். வாடகைக் குறைவாகவும், உழைப்பு திறமையானதாகவும் இருப்பதோடு, பல்கிப் பெருகிக் கிடப்பதாலும், அங்குள்ளார் அனைவரும் 'கூலி மோட்டார்' களையே உபயோகிப்பார்கள். 'பெட்ரோல்' விலையும் 'காலனு'க்கு ஆறு அணாதான். இதைக்கேட்ட இந்திய மோட்டார் சொந்தக்காரர்கள் வாயில் நீர் ஊறும் என்பதில் சந்தேகமில்லை! பெருஞ் செல்வச் சீமாட்டியும் அங்கு நகை அணிவது கிடையாது. இரும்பாலான மண மோதிரங்களை அங்கு சில பெண்கள் அணிந்திருப்பதை நாம் காணலாம். இந்த வகையில் எவ்வளவு வித்தியாசம் இந்தியாவிற்கும் ஜப்பானுக்கும் இருக்கிறது? நகைகளை வாங்குவதற்குப் பொருள் இருந்தாலும் இல்லாவிட்டாலும், பணம் கடன் வாங்கியாவது நகைகள் கொள்ளுவதை இங்கு இந்தியாவில் காண்கிறோமல்லமோ? ஜப்பானியர்கள் உணவும் மிக எளிமையானதாகும். சிறப்பாக காய்கறிகளும், மீனும், சோறும் அவர்களது உணவாகும். வீடுகள் விலை ஏறினதாக இல்லாமலும் அதிகமான மாச் சாமான்கள் இல்லாமலும் இருக்கும்.

எந்த விதமான வாழ்க்கைத் துறையான போதிலும் ஜப்பானியர்கள் சுறுசுறுப்புடையவர்களாவார்கள். அவர்கள் உழைப்பதில் பின்னடையாததோடு, கடினமாக வேலை செய்வதில் ஆர்வமுடையவர்களாகவும் இருப்பார்கள். வேடிக்கை விநோதங்கள் சிலவேயாம். இப்பொழுதும் அங்கு சர்க்கார் காரியாலயங்களில் வேலை செய்யும் நேரம் நாளொன்றுக்கு எட்டு மணியேயாகும். அவர்கள் மனமார உழைப்பவர்கள். தொழிலைப் புறக்கணித்து விடுவதைக் காட்டிலும், அதிலேயே உயிரை அர்ப்பணஞ் செய்யும் இயல்பினர்கள். கொஞ்சம் மேற்பார்வையும், கண்காணிப்புமே போதுமானது. அங்கு பிரதம ஞாயஸ்தலத்தின் நீதிபதிக்கு மாதச் சம்பளம் முந்நூறு ரூபாயும், அவருடைய குமாஸ்தாவுக்கு மாதச் சம்பளம் நூறு ரூபாயுந்தான் என்பதை அறிய வந்ததும் நாங்கள் பெரும் வியப் பெய்தினோம். உத்தியோகஸ்தர்களின் தலைகனத்த ஆட்சி அங்கில்லை. உத்தியோகஸ்தர்களுக்குக் கொடுக்கப்பெறும் குறைந்த சம்பள விகிதத்தினால் உத்தியோகத்தில் லஞ்சமும், கவலைக் குறைவும் இருக்கலாமென ஒருவர் எதிர்பார்க்கலாம். ஆனால் அது அத்தி பூத்தது போலத்தான் இருக்கும். அவர்கள் உண்மைப்பற்று, இயல்பாகப் பிறந்ததேயன்றி தற்செயலாகத் தோன்றினதல்ல. சிறப்பாக போலீசார்களும் திறமை, உண்மை, மரியாதை முதலியவைகள் வாய்க்கப்பெற்றவர்கள். ஜப்பானியர்களுடைய தொழில் முறையானது ஆச்சரியப்படத் தகுந்த ஒன்றாகும். அப்படி இல்லாதிருக்குமானால், மிகக் குறைவான விலையில் பொருட்களைத் தயார் செய்து வெளி நாட்டு சந்தைகளை வெள்ளப் பிரவாகம் போன்று அவர்களால் நிரப்பமுடியுமா?

ஜப்பானியர்கள் ஆண் பெண் அடங்கலும் இன்ப துன்பங்களைத் தாங்களே ஒழுங்குபடுத்திக் கொள்வர்களாவர். ஜப்பானியப் பெண்கள் சிரிப்பதில்லை என்பதையும், அவர்கள் குழந்தைகள் அழுவதில்லை என்பதையும் என் மனைவி கண்டிருக்கிறாள்.

ஜெர்மன் முறையைப் பின்பற்றி அமைக்கப்பட்டுள்ள ஜப்பானியர்கள் கல்விபயிற்சியானது வலிமையானதும், காலத்துக் கேற்றதுமாகும். உண்மையில் அங்கு கல்வி இன்மையே கிடையாது. கணக்கற்ற சர்வகலாசாலைகள், தொழிற் கல்விசாலைகள், மருத்துவப் பயிற்சி சாலைகள், முதலியவைகள் முன்னிலையில் அங்கு எண்ணத் தொலையாத ஆரம்ப பள்ளிக்கூடங்களும் இருக்கின்றன. டோகியோ நகரிலுள்ள டாய்மேய் ஆரம்பப் பள்ளியை நாங்கள் பார்வை இட்டோம். அதன் இனங்களுக்கு அது ஓர் பிரதிநிதி ஸ்தாபனம் போன்று இலங்குகிறது. அங்கு பயிலும் சிறுவர்களுக்குப் பகல் உணவு இனமாக அளிக்கப்படுகிறது. அங்கு தொழில் சம்மந்தமான போதனைகளும் தரப்படுகின்றன. சிறுவர்களின் உடல் நிலையைப் பாதுகாப்பதற்கான சகல சாதனங்களும் பொருந்தியுள்ள மருத்துவச் சாலையொன்றும் இருக்கிறது. சிறுவர்களின் ஆரோக்கியம்பற்றி அதிகம் அக்கரை காட்டப்படுகிறது.

ஜப்பானில் புகை வண்டிகள், டிராம்கள், பஸ்கள் ஆகியவைகள் அதிக சுத்தமாகவும் ஒழுங்காகவும் இருக்கின்றன. அவைகளில் கடைசி வகுப்புங்கூட பட்டுத் துணியால் மூடப்பட்ட ஆசனங்களாக இருக்கும். அந்த தேசம் முழுதும் மின்சாரம் பாவி இருக்கிறது. இன்னும் அங்கு எங்கு நோக்கினும் சிறிதும், பெரிதுமான தொழிற்சாலைகள் சிதறிக் கிடப்பதைக் காணலாம்.

ஜப்பான் தொழிற் சிறப்புக்கு நவீன டோகியோ நகரம் ஓர் நினைவுச் சின்னமாகும். அந்த நகரமானது 1923-ல் தோன்றிய மண்கம்பத்தால் உருத் தெரியாமல் அழிந்து போய்விட்டது. இருந்தாலும் திரும்பவும் ஏழு ஆண்டுகளுக்குள்ளாக அந்நகரம் புதுப்பிக்கப்பட்டு விட்டதோடு, நவீனமாக்கப்பட்டு தற்பொழுது நியூயார்க் (அமெரிக்கா) நகருடன் போட்டியிடத் தகுந்த நிலையிலும் இருந்து வருகிறது.

—'ஹிந்து.'

தயாராகி விட்டது! தயாராகி விட்டது!!

## ஊழியன் பயிண்டு வால்யூம்

மலர் 15-ல் 1 முதல் 51 வரையுள்ளது. (4 வால்யூம்) ரூ. 6—8—0.

மானேஜர், "ஊழியன்" ஆபீஸ்,

56, தம்பு செட்டித் தெரு, :: :: சென்னை.



# வினையும்—விசாரணையும்

### ஜட்காவாலாவின் காமவெறி

தாம் அடகு வைத்திருந்த நகைகளை மீட்பதற்காக, அரக்கோணம் தேவதானம் கிராமத்தைச் சேர்ந்த ஒரு பெண் (வயது 37) சென்னை புரசவாக்கத்திற்கு வந்தாள். வழியில் முன்னமைப் போல் தோற்றிய ஒரு ஜட்கா வண்டிக்காரன் அவளை யணுகி தன் வண்டியில் வரும்படியும், தன் வீட்டிலேயே தூங்கலாமென்றும் அங்கு பெண்கள் இருப்பதால் சந்தேகம் வேண்டாமென்றும் கூறினான். பெண் அதற்கிசைந்து வண்டியிலேறினாள்.

சற்று நேரத்தின்பின் வண்டிக்காரன் பெண்ணுடன் ஏறுமாறாக நடந்து கொள்ளலானான். அவள் இணங்கவில்லை. ஆகவே வண்டிக்காரன் அவள் முகத்தில் அறைந்து காயப்படுத்தினான். அடிபட்டதும் மூர்ச்சையானாள். மூர்ச்சை தெளிந்து பார்த்தபோது தாம் தனியான ஓரிடத்திலிருப்பதாகக் கண்டாள். எனவே பயத்துடன் எழுந்து நடக்க, வழியில் மூர்ச்சையாகிவிட்டாள். வெகு நேரத்தின்பின் அங்கு ஒரு பங்களாமுன் காவல் நின்ற ஒருவன் கண்டு காப்பாற்றி காலையில் ஆஸ்பத்திரிக்கு இட்டுச்சென்றான். பெண் இறக்கும் நிலைமையிலிருக்கிறாள்.

அப்பெண்ணின் பெயர் தனபாக்கியம் மாள். ஒரு பெரிய பணக்காரனின் மனைவியாம். புருஷன் கைவிட்டு விட்டதால் ஜீவனாம்சம் மட்டிலும் பெற்றுக் கொண்டிருக்கிறாளாம்.

### மகனை சங்கிலியில் கட்டியதாய்

கல்கத்தாவில் ஜானகி என்ற ஒரு பெண் தன் 10 வயது மகனை நாய் போல் சங்கிலியால் கட்டிப் போட்டிருந்தாளென்று குற்றம் சாட்டி இந்திய குழந்தைகள் பாதுகாப்புச் சங்கத்தைச் சேர்ந்த திருமதி ஆஷ்செஞ்சி கொடுத்த தகவலின் மீது போலீசார் சோதனை வாரண்டோடு சென்று சிறுவனை மீட்டனர். இது சம்பந்தமாக வழக்கில் நீதிபதி தாய்க்கு 3 மாதம் கடுங்காவல் தண்டனை விதித்து விட்டு சிறுவனை குழந்தைப் பாதுகாப்பு சங்கத்துக்கு அனுப்பினர்.

### மனைவியும் புருஷனும் விபசாரம் செய்தனர்

பஞ்சாப் ரெஜிமென்டைச் சேர்ந்த காப்டன் எட்வர்ட் பிரான்ஸின் அல்பர்ட் என்ற ஒரு ஐரோப்பியர் விடியன் னொடின் அல்பர்ட் என்ற தன் மனைவி மின்டர் எல். டி. பிலிப் ஆப்ரே லெட்னியுடன் நெறிதவறி நடந்து கொண்டதாகவும், அதற்காக தனது விவா

கத்தை ரத்து செய்யவேண்டும் என்றும் கல்கத்தா நீதிமன்றத்தில் மனுச் செய்து கொண்டிருந்தார். அவரது மனைவியும் தமது புருஷன்மேல் அதே குற்றச் சாட்டைக் கூறி விவாகரத்து செய்துகொள்ள அனுமதிக்க வேண்டும் என்றும் அப்பீல் கொடுத்தார்.

நீதிபதி புருஷனின் மனுவை தெறிப் பிசகு நிரூபிக்கப்படவில்லை என்று தள்ளிவிட்டு, மனைவியின் மனுவை அனுமதித்து குழந்தை அவள் வசம் இரண்டு வருஷகாலம் இருக்கவேண்டும் என்றும் அதற்குள் மறுபடியும் அதே குற்றம் ஏற்பட்டால் உத்திரவு நிரந்தரமாகு மென்றும் தீர்ப்புச் சொன்னார்.

## தம்பிக் கப்பல்மீது வழக்கு

சங்குமாரு என்ற ஒரு கப்பல் வங்காள ஆசாம் ஸ்டீம்ஷிப்புக்குச் சொந்தமான ஒரு கப்பலுடன் மோதி விட்டுப் போய் விட்டது. சில நாள் சென்று ஹாவ்ரேமாரு என்ற ஒரு கப்பல் கல்கத்தா துறைமுகத்திற்கு வந்தது. அக்கப்பல் சங்குமாரு கப்பல் சொந்தக்காரர்களைச் சேர்ந்தது. ஆதலால் ஹாவ்ரே மாருவைக் கைது செய்ய வேண்டுமென்று ஆசாம் ஸ்டீம்ஷிப் கம்பெனியார் வழக்குத் தொடர்ந்தார்கள். கப்பல் சட்டப்படி மனுவின் குறிப்பிடப்பட்ட விஷயம் சாத்தியமாவென்று ஆராயப்பட்டது. கடைசியில் ஜட்ஜ் பின் வருமாறு தீர்ப்புக் கூறினர்:—

"தப்பு செய்த கப்பலுக்குப் பதிலாக அதன் சகோதரக் கப்பல் ஜப்தி செய்வது 18-வது நூற்றாண்டைச் சேர்ந்தது. அது இப்போது காலங் கடந்து விட்டது. ஆகவே ஹாவ்ரே மாருவைப் பிடிக்க முடியாது."

## சோல்ஜரை பிடித்தான் கான்ஸ்டபில்

லாகூரில் ஓர் ராத்திரியில் இரண்டு சோல்ஜர்கள் ஒரு வண்டியை வாடகைக்கு அமர்த்தி ஏறிக்கொண்டு சென்று சற்று தூரம் போனபின் திடீரென வண்டிக்காரனைத் தள்ளி விட்டு வண்டியை ஓட்டிப் போய் விட்டார்கள். அவ்வண்டியில் விளக்கு இல்லை. ஆதலால் வழியில் காவல் நின்ற கான்ஸ்டேபில் கைது செய்ய வேண்டியதாயிற்று. ஒருவன் ஓடி விட்டான். மற்றொருவன் மீது வழக்கு தொடரப்பட்டது.

## போலீசாரோடு போர்

திருவாங்கூரில் பறவூர் என்ற இடத்தில் ஒரு திருட்டு வழக்கு சம்பந்தமாக விசாரணை செய்யப்போன ஒரு போலீஸ் சப் இன்ஸ்பெக்டரையும், சில கான்ஸ்டேபில்களையும் ஒரு முஸ்லிம் கோஷ்டியினர் தாக்கி துரத்தியதோடு கைது செய்யப்பெற்றிருந்த ஒருவனையும் போலீசாரிடமிருந்து பிடித்திழுத்துக்கொண்டனர். இது சம்பந்தமாக சர்க்கார் ரிசர்வ் போலீஸ் படையை அங்கு அனுப்பியிருக்கிறார்கள் என்று தெரிகிறது.

## அந்தமானுக்கு சட்டசபை மெம்பர்கள்

அக்டோபரில் அசம்பளிக் கூட்டம் முடிந்தவுடன் சில எம். எல். ஏக்கள் அந்தமானுக்கு அனுப்பப்படுவார்களென்று தெரிகிறது. அந்தமான் கைதிகள் நிலைமையை விசாரித்தறியவேண்டுமென்று நெடுநாளாக இந்தியர் ஆசைப் படுவதை முன்னிட்டே சில எம். எல். ஏ.க்கள் அனுமதிக்கப்படுகின்றனர் என்று கேள்வி.

## குன்றுக்குடி அன்னதான சத்திரத்தின் போக்கு

ஆத்தங்குடி செ. கா. குடும்பத்தார்களால் குன்றுக்குடியில் சிவகங்கை மஹாராஜா அவர்களால் கொடுக்கப் பட்ட தர்மாசனச் சொத்துக்களிலிருந்து நடத்தி வரும் அன்னதானச் சத்திரம் கொஞ்சகாலமாகச் சரிவர நடைபெறவில்லை என்று பொதுஜனங்களால் புகார் செய்யப்பட்டு ஸ்கீமுக்குக் கொண்டுவர வேண்டுமென்று ஸ்ரீமான் சுப்பராய அய்யர் வகையரு பேர்கள் சென்னைப்பட்டணம் அட்வகேட் ஜனரல் அவர்களிடம் அநுமதி கேட்டிருந்ததில் சுமார் இரண்டு வருஷ காலமாய் இரு தரப்பாரின் வாதங்கள் நடந்தானது ௵ ஆவணி ௴ 1௳ 16-8-'36ல் ஸ்கீம் ஸூட் போட்டுக் கொள்ளும்படி ஆர்டர் செய்திருக்கிறார்கள்.

செட்டி நாட்டில் உள்ள பல தர்ம ஸ்தாபனங்களிலும் மேம்பட்ட வருவாயை யுடையதாயும், சுமார் பத்து லக்ஷ ரூபாய் வரை பெறுமானமுள்ள தகுதியான சொத்துக்களுடையதாயுமுள்ள அன்னதான சத்திரம் இங்ஙனே அடைந்ததுபற்றி பொது ஜனங்கள் மிக்க பரபரப்புற்றிருக்கின்றனர்.

—ஒரு நிருபர்.

---


# மதுரைக்கு

டிபாஸிட் கட்டக்கூடிய

## ஏஜெண்டு தேவை

மானேஜர்,

ஊழியன், சென்னை


## தேசீயக்கொடியில் யூனியன் ஜாக்

சர்தார் மங்களசிங் எம். எல். ஏ. இந்திய சட்டசபையில் தாம் கொண்டு வரவிருக்கும் ஒரு தீர்மானத்திற்கு நோட்டீஸ் கொடுத்திருக்கிறார்.

தேசீய மூவர்ணக் கொடியின் ஒரு மூலையில் யூனியன் ஜாக் கொடியின் சித்திரத்தை அச்சிட்டு அதனையே இந்தியக் கொடியாகக் கொள்ள வேண்டுமென வைஸிராய் விளம்பரம் வெளியிட வேண்டுமென்று அத்தீர்மானம் கோருகிறது.

---

## ஸ்ரீமதி ருக்மணி லக்ஷ்மிபதி ராஜிநாமா வாபிஸ்

சென்னை கார்ப்பொரேஷன் தேர்தலில் அட்ஹாக் கமிட்டியார் ஸ்ரீமதி ருக்மணி லக்ஷ்மிபதியை ஒரு அபேட்சகராக நியமித்திருந்தார்கள். அவ் அபேக்ஷகர் ஸ்தானத்தை அவர் ராஜிநாமா செய்து கடிதம் எழுதினர். அட்ஹாக் கமிட்டியார் அந்த ராஜிநாமாவை ஏற்றுக்கொள்ள மறுத்ததால் ஸ்ரீமதி ருக்மணி லக்ஷ்மிபதி வாபிஸ் வாங்கிக் கொண்டார்.



## கடன் பத்திரங்களும் பங்குகளும்

(ட்ரோஜன் கம்பெனியாரிடமிருந்து)

சென்னை, செப்., 2.

| சர்க்கார் கடன் பத்திரங்கள் :— | | வாங்கும் விலை | விற்கும் விலை |
|---|---|---|---|
| | | ரூ. அ. | ரூ. அ. |
| 3 % 1941 | (வரியுள்ளது) | 104—9 | 104-10 |
| 3 „ 1951-54 | „ | 104—0 | 104—1 |
| 3½ „ ஜி. பி. நோட்ஸ் | „ | 99-11 | 99-12 |
| 3½ „ 1947-50 | „ | 107-14 | 107-15 |
| 4 „ 1943 | „ | 111—7 | 111—8 |
| 4 „ 1960-70 | „ | 115-10 | 115-11 |
| 4½ „ 1955-60 | „ | 119—9 | 119-10 |
| 5 „ 1939-44 | „ | 108-12 | 108-13 |
| 5 „ 1940-43 | „ | 111—9 | 111-10 |
| 5 „ 1945-55 | (வரியில்லாதது) | 121—0 | 121—1 |
| 5½ „ 1938-40 | (வரியுள்ளது) | 107—9 | 107-10 |
| 3 „ 1956-61 மைசூர் | (வரியில்லாதது) | 101-15 | 102—1 |
| 3½ „ 1951-58 „ | „ | 106—0 | 106—2 |
| 4 „ 1953-63 „ | „ | 112—5 | 112—8 |
| 5 „ 1955 „ | „ | 125-10 | 125-12 |
| 5½ „ 1938 „ | „ | 107—6 | 107—7 |
| 6¼ „ 1940 „ | „ | 113-12 | 113-14 |
| 6¼ „ 1941—51 „ | „ | 119—8 | 119-10 |
| 6 „ 1943-53 கொச்சி | „ | 111—4 | 111—6 |

---

| பாங்கி:— | | | ரூ. |
|---|---|---|---|
| ரிசர்வ் | பாங்க் | | 134 |
| இம்பீரியல் | „ | (F.P.) | 1555 |
| „ | „ | (P.P.) | 387/8 |
| இந்தியன் | பாங்க் | (பெரிது) | 137 |
| „ | „ | (சிறிது) | 28/12 |
| னெண்டிரல் | „ | | 33/8 |
| வெள்ளி:—(பம்பாய்) | | | |
| ரெடி | | | 48/12 |
| தங்கம்:—(பம்பாய்) | | | |
| ரெடி | | | 34/3 |
| புரோக் பஞ்சு:—(பம்பாய்) | | | |
| ஏப்ரல்—மே | | | .... |

## ரயில் போக்கு வரவு

### மதுரல்-எழும்பூர்

மெயின் லைன்

| வண்டிப் பெயர் | புறப் படும் நேரம் | வரும் நேரம் |
|---|---|---|
| இண்டோ ஸிலோன் எக்ஸ்பிரஸ் .... | மாலை 9 0 | காலை 6 45 |
| செங்கோட்டை பாஸஞ்சர் .... | காலை 7 30 | மாலை 7 30 |
| கடலூர் பாஸஞ்சர் .... | மாலை 4 5 | காலை 11 20 |
| திருவனந்தபுரம் பாண்டு பாஸஞ்சர்.... | மாலை 9 30 | காலை 6 10 |
| திருச்சி பார்சல் .... | மாலை 10 20 | காலை 5 30 |

### கார்டு லைன்.

| வண்டிப் பெயர் | புறப் படும் நேரம் | வரும் நேரம் |
|---|---|---|
| தனுஷ்கோடி பாண்டு பாஸஞ்சர் .... | காலை 11 25 | மாலை 2 45 |
| திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் .... | மாலை 8 0 | காலை 7 20 |

### மதராஸ்—சென்ட்ரல்

| வண்டிப் பெயர் | புறப் படும் நேரம் | வரும் நேரம் |
|---|---|---|
| கல்கத்தா மெயில் | மாலை 8 35 | காலை 7 50 |
| கிராண்டு டிரங்க் எக்ஸ்பிரஸ் .... | காலை 7 45 | மாலை 5 15 |
| பம்பாய் மெயில் .... | மாலை 8 45 | காலை 5 55 |
| பம்பாம் எக்ஸ்பிரஸ் .... | காலை 8 30 | மாலை 4 55 |
| பங்களூர் மெயில் .... | மாலை 9 30 | காலை 6 10 |
| „ எக்ஸ்பிரஸ் .... | மாலை 1 0 | மாலை 2 10 |
| „ பாஸஞ்சர் .... | காலை 6 20 | மாலை 7 40 |
| „ „ .... | மாலை 9 40 | காலை 5 50 |
| ஜோலார்ப்பேட்டை பாஸஞ்சர் .... | மாலை 12 50 | மாலை 2 0 |
| அரக்கோணம் பாஸஞ்சர் .... | மாலை 6 30 | காலை — |
| காட்பாடி பாஸஞ்சர்.... | 6 30 | 9 40 |
| மலபார் எக்ஸ்பிரஸ் .... | 8 5 | காலை 7 20 |
| ப்ளு மௌண்டன் எக்ஸ்பிரஸ் .... | 9 15 | 6 30 |

(6-ம் பக்கம் தொடர்ச்சி)

தேதியில் பிறந்தார்கள் என்பதும் ஒரு காரணமாக இருக்கலாமோ என்னமோ!

டாக்டர் நாயுடு,

திருச்சியில் நடந்த சம்பவத்தில் டாக்டர் ராஜனே தமிழ்நாட்டுக் கமிட்டியோ எது குற்றவாளியாக விருந்தாலும், திரு. பொன்னையா பிள்ளை முதலிய முனிசிபல் அங்கத்தினர் காங்கிரஸ் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டுவிட்டு, அப்பால் அதன்படி ராஜிநாமா செய்யச் சொல்லும்போது அதற்குடன் படாமலிருப்பதுதான் பெரிய தப்பிதமென்றும், அத்தகையோரை ராஜிநாமா செய்யும்படி வற்புறுத்துவதே கடமை யென்றும் சொன்னார். கூட்டம் முழுதும் கரகோஷத்தாலும் சந்தோஷ ஆரவாரத்தாலும் ஆமோதித்தது. டாக்டர் நாயுடு, தேவையானல் தாமே சென்று சத்தியாக்கிரகம் செய்து முனிசிபல் அங்கத்தினர்களை ராஜிநாமா செய்யும்படி தூண்ட முன்வருவதாகவும் சொன்னார்.

அவருக்குப்பின்

பேசிய திரு. ஜோசப் ஓர் நீண்ட பிரசங்கத்தைப் படித்தார். அதில், தான் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை யொழித்து விட்டு ஓர் இந்திய ஏகாதிபத்தியத்தைக் காண விரும்புவதாகவும் காங்கிரஸ் அந்தஸ்தைக்காக்க மற்றக் கட்சியாரை சட்டசபைகளில் நுழைய விடதாம் ஆசைப்படவில்லை யென்றும் சொன்னார்.

இந்த சந்தர்ப்பத்தில்

ஒரு வார்த்தை. தமிழ் நாட்டில் நாயுடு, நாயக்கர், முதலியார் என்று மூவரை முக்கியமாகக் குறிப்பிடுவது வழக்கம். இது கிட்டத்தட்ட வடநாட்டில் Pal, Bal, Lal, (பால், பால், லால்) என்று சொல்வதை யொத்தது. நாயுடு என்பதால் டாக்டர் வரதராஜுலு குறிக்கப்படுகிறார். நாயக்கர் என்பதால் தோழர் ஈ. வே. ராமசாமி குறிக்கப்படுகிறார். முதலியார் என்பதால் திரு. வி. கல்யாணசுந்தரர் குறிக்கப்படுகிறார். இம்மூவரும் கிட்டத்தட்ட ஒரே சமயத்தில் காங்கிரஸைவிட்டு வெளியேறினவர்களாவர். இவர்களில் நாயுடுவும், முதலியாரும் இப்போது காங்கிரசில் வந்து விட்டார்கள். இனி நாயக்கர் மட்டிலுந்தான் பாக்கி. அவர் அடுத்தபடியாக வந்து விடுவதே கடமை. நிகழ்ச்சி முறைகளை நோக்கினல் சமீபத்தில் வந்து விடுவாரென் பதில் சந்தேகமில்லை.

அவர் வருவதற்கு முன்

தயவுசெய்து சர்க்கார் காங்கிரஸை சற்று பார்க்கவேண்டும். பார்த்து நாளுக்கு நாள் அது வளர்கிறதா, தேசம் சுதந்திரதாகத்தால் கோதிக்கிறதா வென்று யோசிக்கவேண்டும்; எஞ்சியவை பிற்பால்.

---

## திரிச்சியில்

### வாக்குறுதிப்படி நடக்க மறுப்பு

காங்கிரஸ் டிக்கட்டில் திருச்சி முனிசிபல் கவுன்சிலில் ஸ்தானம் பெற்று பின்பு சேர்மன் பதவிக்கு தேர்ந்தெடுக்கப் பெற்ற திரு. பொன்னையா பிள்ளை தமிழ் நாட்டு கா. கமிட்டி ஆணைப்படி தம் பதவியை ராஜிநாமா செய்ய மறுத்து விட்டு பதிலாக காங்கிரஸ் அங்கத்தினர் பதவியை ராஜிநாமா செய்து விட்டாரென்று தெரிகிறது. பொது ஜனங்களால் தாம் தேர்ந்தெடுக்கப்பட்டதாகவும் எனவே தம் பதவியை விடுவதற்கில்லையென்றும் கூறினாராம்.

---

## சமதர்மத்திற்கெதிராக இரு ராக்ஷச சக்தி

ஜெர்மன் பிரசார மந்திரியாகிய டாக்டர் கோபெல்ஸ் ஆகஸ்ட் 29-ந் தேதி விமானம் மூலம் வெனிஸ் (இதாலி)க்குப் போனார். சிஞ்ஞோர் முசோலினியுடன் கலந்து பேசுவார். இதன் நோக்க மென்னவென்று தெரியாமல் போனலும், ஐரோப்பாவில் சமதர்மிகட்கெதிராக சக்தி சேர்க்க வேண்டுமென்று ஹிட்லரும் முசோலினியும் முயல்கின்றார்களென்று சொல்லப்படுகிறது.

இதேபோது ஹங்கேரியில் முடியரசு பிரதிநிதியாக இருக்கும் அட்மிரால் ஹாரிதி ஆஸ்திரிய சர்வாதிகாரியான டாக்டர் ஷூஷ் நிக்கை சந்தித்துப் பேசுகிறார். இதுவும் சோவியத்தை அடக்குவதற்கான முயற்சி என்று நம்பப்படுகிறது.

## முசோலினி திமிர்

ஒரு ராணுவக் காட்சியின் கடைசியில் முசோலினி சமீபத்தில் பேசிய போது அடியில் வருமாறு குறிப்பிட்டார்:—

எந்தவிதமான ஆபத்தையும் தடை செய்ய இத்தாலியர் தயாராகவேண்டும். இந்தக் கொள்கைக்கே இத்தாலியார் வாழ்வு தத்தமாக வேண்டும். இப்போது இத்தாலியால் ஒரு சில மணி நேரத்தில் 80 லட்சம் துருப்புகளைத் திரட்ட முடியும். இஃது 14 வருட பாஸிஸ்டு ஆட்சியின் பலனன்றி வேறென்ன? ஆட்சிக்காப் படையெடுப்பினல் நம் வலிமை பலபடி அதிகரித்துள்ளது.

---

## "பாரத கேசரி"; வரப்போகிறது

அக்டோபர் மாதத் துவக்கத்தில் கலை, இலக்கியம் ஆகிய விஷயங்களைக் கொண்டு கேசரி எனும் தமிழ் மாதப் பத்திரிகை சென்னையினின்று வெளி வருமென்று, அதன் ஆசிரியர் திரு. கே. எஸ். சங்கரையா அறிவிக்கிறார்.

---

## நிதி திரட்ட புதிய வழி

பாபு மோகன்லால் சாக்சேன எலக்ஷன் நிதி யொன்று திரட்டுவதற்காக ஒரு அறிக்கை விடுத்துள்ளார். தலா ஒரு அணுவாவது நிதிக்காக வாங்குவதென்று முடிவு செய்திருக்கிறார்கள். அவ் அறிக்கையில் திரு. சாக்சேன குறிப்பிட்டிருப்பதாவது:—

"காங்கிரஸுக்கு அதன் மந்திரிகளோ, மாஜி மந்திரிகளோ பாங்கில் வைத்திருக்கும் எந்தவிதமான நிதியும் உதவி செய்வதற்கில்லை. ஆனல் 51 வருடமாக அது புரிந்துள்ள தியாகத்தில் பலமிருக்கிறது. உலகப் பெரியாராகிய காந்தியின் அருள் இருக்கிறது. காங்கிரஸ் தலைவரின் கட்டில்லாதியாகமும் மட்டில்லா சுதந்திர வேட்கையும் துணை நிற்கின்றன. காங்கிரஸ் தொண்டர்களின் மனமார்ந்த ஒத்துழைப்பும் தன்னலமற்ற உதவியு[மிருக்கின்றன. இவற்றை யெல்லாம்விட [பசியால் வாடும் பலாது உதவியிருக்கிறது,"






## வட்டி விகிதம்

ரெங்கூன் நடப்பு வட்டி,

| | | |
|---|---|---|
| தாது சித்திரைமீ | வட்டி ரூ. | 0—4—6 |
| " வைகாசிமீ | வட்டி ரூ. | 0—4—0 |
| " ஆனிமீ | வட்டி ரூ. | 0—4—0 |
| " ஆடிமீ | வட்டி ரூ. | 0—4—0 |
| " ஆவணி | வட்டி ரூ. | 0—4—0 |

மதராஸ் நடப்பு வட்டி

| | | |
|---|---|---|
| தாது சித்திரைமீ | வட்டி ரூ. | 0—7—0 |
| " வைகாசிமீ | வட்டி ரூ. | 0—7—0 |
| " ஆனிமீ | வட்டி ரூ. | 0—7—0 |
| " ஆடிமீ | வட்டி ரூ. | 0—6—9 |
| " ஆவணி | வட்டி ரூ. | 0—6—0 |

ரங்கூன் தவணை வட்டி

தாது வைகாசி 14உ 0—3—6

கொழும்பு நடப்பு வட்டி

1936 மே 0—5—9

செய்கோன்

தாது ஆடி நடப்பு வட்டி 0—4—0
" தவணை வட்டி 0—4—0

8-8-36-ல் நெல் விலை பிக்கல் 1-க்கு 2$14-லிருந்து 2$18 வரை.

8-8-36-ல் அரிசி விலை பிக்கல் 1-க்கு 3$14-லிருந்து 3$16 வரை.

8-8-36-ல் குருணை விலை பிக்கில் 1-க்கு 2$66-லிருந்து 2$68 வரை.

பினங்கு

புவ ஆடி நடப்பு வட்டி 0—4—0
" " தவணை வட்டி 1உ 0—3—6
" " தவணை " 16உ 0—3—6

சிங்கப்பூர் நடப்பு வட்டி

தாது ஆனிமீ 0—4—0

தவணை வட்டி

தாது ஆனிமீ 16உ 0—3—6
" ஆடிமீ 1உ 0—3—6

## ரப்பர்

லண்டன், ஆகஸ்டு, 31உ

லண்டன் ஷீட் ரப்பர் வாங்குவோர் விலை பவுன் 1-க்கு 7 5/8 பென்ஸ்
விற்பவர் விலை 7 11/16 பென்ஸ்

---

## தங்கம், வெள்ளி

சென்னை, செப், 2உ

| | |
|---|---|
| சவரன் (சில்லரை) | 21-15—3 |
| " மொத்தமாக | 21-15—0 |
| ஆலைத்தங்கம் தோலா 1-க்கு | 34-2—0 |
| மூனா தங்கம் " | 33-12—0 |
| வெள்ளி மொத்த விலை | |
| 100 ரூபா எடைக்கு | 49-10—0 |
| 1 ரூபா எடைக்கு | 0—8—3 |

---

ரிசர்வ் பாங்க்:—மூன்று பெர்சென்டு.
இங்கிலாந்து பாங்க்:—இரண்டு பெர்[சென்டு

---

## உண்டியல் விலை

டிமாண்ட் விற்பனை 157¼
90 நாள் தவணை வாங்குவது 155

---

## பிரஞ்சு கப்பல்கள்

(வி. கே. அய்யர் அறிவிக்கிறார்)

கொழும்பிலிருந்து சிங்கப்பூர், செய்கோனுக்குப் புறப்படும் கப்பல்கள் கொழும்பிலிருந்து புறப்படும் தேதி

தெர்த்தாழ்னன் 7—9—36

## கப்பல்

### சென்னையிலிருந்து ரங்கூன்

ஏரின்புரா:—செப். 4-ந் தேதி போகும்.

எதோபியா:—செப். 7-ந் தேதி வந்து 11-ந் தேதி போகும்.

---

### மலையா

ரஜுலா:—செப்டம்பர் 5-ந் தேதி வந்து 8-ந் தேதி புறப்படும்.

ரோனு:—செப். 19-ந் தேதி வந்து 22-ந் தேதி புறப்படும்.

---

### நாகப்பட்டினத்திலிருந்து மலாயாவுக்கு

| | |
|---|---|
| ரஜுலா | 12—9—36 |
| ரோனு | 26—9—36 |
| ரஜுலா | 10-10—36 |
| ரோனு | 24-10—36 |

---

### மலாயாவிலிருந்து நாகப்பட்டணத்திற்கு

| | |
|---|---|
| ரோனு | 17—9—36 |
| ரஜுலா | 1-10—36 |
| ரோனு | 15-10—36 |
| ரஜுலா | 29-10—36 |

## சென்னை சட்டசபை நிகழ்ச்சி

### பரிவர்த்தனை மசோதா

சென்னை 28, 29, 30, 31,

கேள்வி நோக்கத்திற்குப் பிறகு திரு. கிருஷ்ணய்ய சவுத்ரி தனது நில பரிவர்த்தனை மசோதாவைப் பொறுக் குக் கமிட்டிக்கு அனுப்பவேண்டுமென பிரேபித்தார்.

கடனில் மூழ்கிக் கிடக்கும் விவசாயி களிடமிருந்து நிலங்கள் கடன் கொடுத்தவர்களிடம் கைமாறிவிடுவ தைத் தடைசெய்வதே அம்மசோதா வின் நோக்கமாகும். அப்பிரரேபணை யின் மீது திரு சவுத்ரி, விவசாயிகள் கையிலிருந்து பயிர்த்தொழிலே இன்ன தென்று அறியாதவர்களிடம் நிலங் கள் போகக்கூடாமல் தடை செய்ய மாகாண சர்க்கார்கள் முயற்சிக்க வேண்டுமென்று 1899-ம் ஆண்டி லேயே இந்திய சர்க்கார் அறிவுறுத்தி யது என்றும், மேலும் இத்தகைய சட்டமொன்று பஞ்சாபிலும் 1902-ம் ஆண்டில் புகுத்தப்பட்டு அமுலிலிருக் கிறதென்றும், அங்கு அச்சட்டத்தின் நோக்கம் காரியத்தில் சரிவர பலன் அளித்திருக்கிறதென்றும் கூறினார். இன்னும் அவர் குண்டூர் ஜில்லாவில் மாத்திரம் விவசாயிகள் சுமார் மூன்று கோடி ரூபாயுக்கு இம்பீரியல் பாங்கிக் கும், மார்வாரிகளுக்கும் கடன்கார ர்களாக இருக்கிறார்களென்றும், விவ சாயிகளல்லாத அம் மார்வாரிகள் பெரும்பாலான நிலங்களை வாங்கிவிட்ட தாகவும் சொன்னர்.

அப்பிரரேபணையை ஆதரித்து திரு. பிரேமையா பேசும்பொழுது "ஜெர்மனியன் விருப்பம் அதி காரம்; அமெரிக்கர் விருப்பம் 'டாலர்'; பிரெஞ்சு மனிதன் விருப்பம் 'வைன்'; ஆங்கிலேய னுக்கு சுருட்டில் மோகம்; இந் தியனுக்கு தன் கழனி இடத்தில் காதல்" என்று குறிப்பிட்டார்.

இதை ரெவினியூ மெம்பர் சர் சார் லெஸ் ஷெனடர் பலமாக எதிர்த்தார். அது சமயம் அவர், பாஞ்சாலத்தின் நிலைக்கும் சென்னையின் தன்மைக்கும் கொஞ்சமும் பொருத்தமில்லையென்றும், அங்கு லேவாதேவியைப் பரம்பரைத் தொழிலாகக் கொண்டவர்களாலேயே விவசாயிகளுக்குக் கடன் தரப்படுகிற தென்றும், ஆனால் சென்னையில் விவசாயிகளே விவசாயிகளுக்குக் கடன் கொடுக்கிறார்களென்றும், மேலும் அம்மசோதா தங்கள் இஷ் டப்படி தங்கள் நிலங்களை விற்பதற்கில் லாமல் விவசாயிகளைச் செய்து விடுகிற தென்றும், மசோதாவை பொதுஜன கருத்துக்கு அனுப்புவதானல் தனக்கு ஆட்சேபனை இல்லையென்றும், ஆனால் பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்புவ தைத் தான் எதிர்ப்பதாகவும் கூறினர்.

இம்மசோதாவைப் பொதுஜன கருத் திற்கு அனுப்பவேண்டுமென பிரேபி த்து திரு. ஸி. ஆர். ரெட்டியார், பிரஸ்தாப மசோதாவில் பொதிந்து கிடக்கும் கருத்தைத் தான் ஆதரிப்பதாகவும், ஆனல் எடுக்கப்படும் நடவடிக்கை நன்மை பயக்கக் கூடியது தானு என்று தான் சந்தேகிப்பதாகவும், இம்மசோதாவால் விவசாயிகள் என் றும், அல்லாதவர்களென்றும் இரு ஜாதிப் பிரிவை இந்தியாவில் உண்டாக்க வேண்டுமென்பது அவர்கள் கருத்தா என்றும், தற்காலம் விவசாயிகள் நிலை மிக மோசமாக இருக்கிறதென்றும், காங்கிரஸ் ஒரு கட்சி என்கின்ற தன்மை யில் விவசாயிகளை உயர்த்த எந்த விஷ யத்தையும் ஆதரிக்குமென்றும், சொத் துரிமையில் தடை விதிப்பது ஓர் அளவிற்கு சமதர்ம மாகுமென்றும், வாயளவில் சமதர்மத்தை எதிர்ப்பவர் கள்கூட காரியத்தில் அதைப்பின் பற்று பவர்களாக இருக்கிறார்களென்றும் குறிப்பிட்டார்.

பொதுஜன கருத்துக்கு அனுப்ப வேண்டுமென தீர்மானத்தை பலர் ஆத ரித்துப் பேசினபின், திரு. ஸி. ஆர். ரெட்டியார் பிரேரபணை நிறைவேறி யது.

சர்க்கார் எதிர்ப்பால் தோற்றுப் போன திரு. பாகதேவ் தொழிலாளர் பாதுகாப்பு மசோதாவின் விவாதமும் இனம் மசோதாவின் மீது நடந்து ருசியான விவாதமும் பின்னர் தரப் படும்.

---

### டில்லி சட்ட சபை

ஆகஸ்டு 31-ந்தேதி இந்திய சட்ட சபை ஆரம்பமாயிற்று. முதல் நாள் காங்கிரஸ் கட்சிக்கு இரண்டு வெற்றி கிடைத்தது. சபை நடைபெறுகிறது. டாக்டர் ராஜன் கூட்டத்திற்குப் போகவில்லை.

---

### டில்லி 'ந்யூஸ் எடிட்டர்'

'ஹிந்துஸ்தான் டைம்'ஸின் மாஜி ஆசிரியராகிய திரு. போத்தன் ஜோசப் ஐரோப்பாவிலிருந்து திரும்பி வருகிறார். அவர் டில்லி பிராட்காஸ்டிங் ஸ்டேஷ னில் இம்மாதம் முதல் (செப்டம்பர் முதல்) ந்யூஸ் எடிட்டராக வேலை பார்ப் பார் என்று தெரிகிறது.

---

### அகில இந்திய சமாதான தினம்

"செப்டம்பர் 4-ந் தேதி பிரஸல்ஸில் உலக சமாதான மகாநாடு கூடும். அங்கு போரை யொழித்து சமாதானம் நிலை நாட்ட வழிதேடப் படுவதோடு மக்களுக்கு மக்கள் இழைக்கும் விபரீ தமான கொடுமைகளை நீக்கவும் வழி கோலப்படும். பல தேசத்திலுமுள்ள பல கொள்கையுடைய பெரியார்கள் பலர் அங்கு வந்திருப்பார்கள். அதனை யொட்டி செப்டம்பர் 6-ந் தேதியை அகில இந்திய சமாதான" தினமாகக் கொண்டாட வேண்டுமென ஸ்ரீமதி சரோஜனிதேவி ஓர் வேண்டுகோள் விடுத்திருக்கிறார். அவர் உலக சமா தான மகாநாட்டுக்காக ஏற்பட்டிருக் கும் சர்வதேச கமிட்டியின் ஓர் அங் கத்தினாவர்.

---

### ஸ்ரீ சரத் சந்திரர் புகழ்

வங்காள மாகாண காங்கிரஸ் ஆக் டிங் தலைவராகிய சரத் சந்திரபோஸ், காங்கிரஸுக்குள் ஒற்றுமையுண்டு பண்ணியதற்காக அவரை வாழ்த்தி லக்ஷ்மணபுரி சர்வகலாசாலை பண்டிதர் டாக்டர் ராதாகிருஷ்ண மூக்கர்ஜி எழு திய கடிதத்தில் "காங்கிரசின் இரு தரப்பாரையும் ஐக்கியப் படுத்தியதற் காக தங்களை தேசம் முழுதும் பாராட் டக் கடமைப்பட்டுள்ளது" என்று குறிப்பிட்டுள்ளார்.

## ஊழியன் சந்தா

| | | |
|---|---|---|
| உள்நாடு வருடச் சந்தா | ரூ. | 6-0-0 |
| ,, ஆறு மாதங்கட்கு | ,, | 3-0-0 |
| வெளிநாடு வருடச் சந்தா | ,, | 10-0-0 |
| ,, ஆறு மாதங்கட்கு | ,, | 5-0-0 |

காரியஸ்தர்,
"ஊழியன்" ஆபீஸ்,
56, தம்புசெட்டித் தெரு,
சென்னை.

## நேயர்காள்!

பத்திரிகையில் காணும் விளம்பரப்படி சாமான்கட்கு ஆர்டர் கொடுக்கும் போது தயவு செய்து 'ஊழியன்' பெயரை குறிப்பிட மறந்து விடாதீர்கள்.

## ராய. சொ. நூல்கள்

| | | |
|---|---|---|
| 1. | தாலாட்டும் கும்மியும் | 0—2—0 |
| 2. | காந்தி இருபா | 0—3—0 |
| 3. | புதுமைப் பாக்கள் | 0—4—0 |
| 4. | காந்தி பதினெண்பா | 0—5—0 |
| 5. | காந்தி பிள்ளைத்தமிழ் | 0—6—0 |
| 6. | காதற் கடிதங்கள் | 0—10—0 |

கிடைக்குமிடங்கள்-

காரைக்குடியில் :—

சுதேசி எம்போரியம்
மோதிலால் எம்போரியம்
பாரதி பிக்சர் பாலெஸ்
காதி பந்தர்

இரங்கூனில் :—

பாரதப் பந்தர் 110x48வது வீதி.
நவீன கதா புத்தகசாலை
251, மங்கோமாரி வீதி.

ராய. சொ. பதிப்பகம்
56, தம்பு செட்டித்தெரு, சென்னை.

நமது பத்திரிகைக்கு சோல் ஏஜண்டு :—
For S. S. & F. M. S.
இந்தியன் நியூஸ் ஏஜன்ஸி,
தபால் பெட்டி 291,
கோலாலம்பூர், (மலாயா)




நீங்கள் லாபம் பெற விரும்பினால்
"ஊழியன்"னில் விளம்பரம் செய்யுங்கள்.

சென்னையில் கைதேர்ந்த தொழிலாளர்களைக்கொண்டு

நூதன முறையில்

குறித்த காலத்தில் பலவித கலர்களில் ஜாப் வேலைகள்

செய்து தரப்படும்

எங்கே? எங்கே?

# ஊழியன் பிரஸில்

குறைந்த சார்ஜ்!



உயர்ந்த வேலை!!

எல்லாவிதமான

அச்சு வேலைகளும், வால் போஸ்டர்களும்,

ரூலிங், பைண்டிங்,

முதலியவைகளும் திருப்திகரமாகச் செய்துக் கொடுக்கப்படும்

அத்தனையும் புதிய எழுத்துக்கள்

## ஊழியன் பவர் பிரஸ்,

56, தம்புச் செட்டித்தெரு, :: :: சென்னை.

Printed and published by Rama Kasinathan for the India Publications Ltd., at the Oolian Power Press, 56, Thambu Chetty Street, Madras.

